



# சிற்பசாஸ்திரமென்னும்
# மனையடி சாஸ்திரம்.

கடவுள் வணக்கம்.

விருத்தம்.

வேதநான்மறைகளாகி விளங்குமும்மூர்த்தியாகி
பூதலந்தனைப்படைத்த புண்ணியன்றாளைப்போற்றி
தீதிலாமயனுர்சொன்ன சிற்பசாஸ்திரமநூலை
நீதியாய்த்தமிழினாலே நிலைபடவுரைக்கலுற்றேன்.

இ-ள். உருக்கு யசுர் சாமம் அதர்வண மென்னும் நான்கு வேதங்களாகிய பிரமா விஷ்ணு ருத்திரனென்னு மும்மூர்த்திகளாயும் ஆக்கல் அளித்தல் அழித்தலென்னும் முத்தொழிலை நடாத்தும் பொருட்டு அண்ட சராசரங்களைப் படைத்த கடவுளினது திருவடிக் கமலத்தைத் துதிசெய்து பஞ்சமுகஸ்வரூபியாகிய பரமசிவத்தின் நெற்றிக்கண்ணினிடமாய்த் தோன்றிய ஆதி விஸ்வகர்மாவென்னும் மயனுர் சொல்லிய மனைநூலைத் தமிழினாற் சொல்லலுற்றேன்-எ-று. 1

ஔவையடக்கம்.

பழத்தோடுநெய்பாற்கண்டு பகர்ந்ததோரடிசிற்றன்னை
கழிப்பாரோநல்லோர்தாமும் வண்மைபுல்லறிவன்கூறப்
பழிப்படுசாஸ்திரத்தில் வண்மைபுல்லறிவன்கூறப்
பழுதியுளுறினுங்கற்றோர் பாவிப்பார்நலமாய்த்தானே.

இ-ள். வாழைப்பழமும் நெய்யும் பாலும் நற்கண்டும் சர்க்கரையும் கலந்த அன்னத்தில் கற்கிடந்தால் அந்தக்கற்களை மாத்திரம் நீக்கி இன்பமாகக் கொள்ளுதல்போல புல்லறிவாளனாகிய யான் சொல்லுமிந்த நூலிற் பிழையுற்றினும் மேலோர் அக்குற்றங்களைத்து சிரேஷ்டமாக கொள்ளுவார்-எ-று. 2

நூல்.

மனைக்கேகும்போது சகுனம்.

மனையதுகோலவென்று வந்தவனோடுசிற்பி
கனிவுடன்வழிச்செல்போது காணுமேற்காமரூபி
வனிதையர்தமைக்கண்டாக்கால் வந்ததுபாக்கியமென்றே
கனிவுடன்சிரத்தையாக நன்மையாய்நடக்கநன்றே.

இ-ள். மனைகோல வேண்டுமென்று யாதாமொருவர் வந்தழைக்க அவரோடு சிற்பியானவர் போம்போது காமரூபியாயிருக்கும் ஸ்திரீகள் எதிர்ப்பட்டால் நல்லயோகமென்றும் விபவிற்றுப் போல் மனைக்கோல நன்மையுண்டாம்-எ-று. 3

மனையில் நிற்கும்போது சகுனம்.

வலமுதற்சொலினும்பல்லி யல்லதாமிடத்திற்கூறப்
பலமிகவுடையதாகும் பாங்குடைக்கமுகநன்றாங்
குலமிகவளருநாளுங் கோற்குறுகாகன்மைந்தர்
பலமிகவுடையராவர் பல்லியினியல்புதானே.

இ-ள். சிற்பியும் அம்மனைக்கு யசமானனும் அம்மனையில் சென்று நின்றால் கௌளி முன்பு வலமாகச்சொல்லில் அழகியது பின்பு இடமாகச்சொல்லில் அம்மனைக்குரியவன் அரசர்களுக்குப் பிரியனாய் புத்திர களத்துடன் சுகித்துவாழ்வான்-எ-று. 4

வெள்ளியபுறாவினோடு விளங்கியபசுவுமற்று
வெள்ளியமாவினோடு முறுவுடன்காணுமாகிற்
றெள்ளியகன்மனன்றாகு சீர்மனைகோலச்சீராய்
வள்ளியராகிவாழ்வார் மண்ணின்மேல்மனையுள்ளோரே.

இ-ள். வெள்ளைப்புறாவும் வெள்ளைப்பசுவும் வெள்ளைக்குதிரையும் தாங்கள் மனையில் நின்றபோது காணில் உத்தமம்-எ-று. 5

எறும்புதானொழுங்குவிட்டே யேகிடிவியற்றவேண்டாம்
தாம்புதான்கயிறாநேர்ந்தி கண்டிடிற்கருதவேண்டாஞ்
சுரும்புதான்கீண்டுயர்ந்து தோன்றிடிற்செய்யவேண்டும்
கரும்புபொன்மொழியினாலே காட்டுமிதிடமைத்தானே.

இ-ள். மேற்சொல்லிய இருவரும் மனையிற்சென்று நின்றபோது எறும்புகள் ஒழுங்குவிட்டு பலவாறாய்ச் சிதறினும் செல்லுகள் பரவியிருக்கினும் வண்டுகள் பூமியைத் துளைக்கினும் ஓணெதிர்ப்படினும் மனைக் கேகலாகாது-எ-று. 6

பாங்குடைப்பாண்டையுந்தான் பண்டுறுவலத்திற்பாடி
தாங்குடனிடத்திற்போய்த் தனிக்குரல்வழியுமாகி
ஓங்கியமனையுநன்று மொள்ளியபயனுண்டாகுந்
தீங்குதான்தருவதில்லை செப்பியவண்ணந்தானே.

இ-ள். மேற்சொல்லிய இருவரும் மனையில் நிற்கும்போது பாண்டை வலத்திற்பாடி வனத்திலிருந்து இடத்திற்போந்து வழியுமாகில் மனைக்கு யசமானனுக்குத் துன்பங்கள் நீங்கி நன்மையுண்டாம்-எ-று. 7

குண்டொவேலையநீமத் தபசியுமடவன்செக்கான்
கொண்டமூக்கறையன்கூனன் குருடனுமெதிரேதோற்றக்
கண்டிடினசித்துப்போகுங் கருதிடவேண்டாமென்று
வண்டுமார்குழலின்மாதே வகுத்துரைசெய்வார்தாமே.

இ-ள். குடியன் வலையன் சுடுகாட்டாண்டி மூடவன் செக்கான் மூக்கறையன் கூனன் குருடன் இவர்களை எதிர்காணில் மனைகோல நசித்துப்போம்-எ-று. 8

மதுக்குடமுடனிறைச்சி மற்றும்பால்நெய்யுநீருங்
கதிக்கிடுகிகிலுங்கட்டிக் கழுத்திபூரணகும்பஸ்தான்

மதித்திடுயானைதேரு மா னுடன்புரவிதானும்
எதிர்க்கவேகாணினன்று மெய்த்திடுங்கருமந்தானே.

இ-ள். மதுக்குடம் மாமிசம்பால் நெய் தண்ணீர் நல்லபுடவை மங்கிலியஸ்திரீ நிறைகுடம் யானைதேர் ஒற்றையாள் புரவி இவைகள் எதிர் காணில் உத்தமம்-எ-று. 9

மனைவுயர்வுதாழ்வு லட்சணம்

அருக்கனுஞ்சோமன்றனு மழநுடன்மிகவேதாழ்ந்து
இருக்கினர்மேற்குந்தெற்குந் தெதிர்ந்துயர்பூமிமேலாம்
வருத்தமில்வாழ்வர்களரு மனையினையெடுத்துக்கொள்ள
கருத்துயர்புலவரியாருங் காரணம்விளம்பலுற்றார்.

இ-ள். சூரியனென்பது கிழக்கு சந்ரனென்பது வடக்கு இவ்விரண்டு திக்குந்தாழ்ந்து தெற்கு மேற்கும் உயர்ந்திருக்கும் பூமி சுகத்தைக் கொடுக்கும்-எ-று. 10

நான்குவருணத்தார் கிரகதிசை.

வேறு.

அந்தணர்தென்றிசை யரசர்மேல்திசை
வந்திடுவணிகர்கள் வடக்குவான்றிசை
தொந்தமில்சூத்திரர் தோன்றுங்கீழ்த்திசை
பிந்தியநடுவது பிரமன்றனமே.

இ-ள். பிராமணருக்கு தெற்கு க்ஷத்திரியருக்கு மேற்கு வணிகருக்குவடக்கு சூத்திரருக்குகிழக்கு குடியிருப்பாராகில் இலட்சுமிகரம் பொருநடு வாழ்வார்கள நடுபிரமஸ்தானமாக கொள்க. 11

மனை லட்சணம்.

வேறு.

இனிதாகியமண்ணவை மாமறையோ
மனிதாகியகாற்பது மன்னவர்தாம்
தனிதாகியதாம்புளிதான் * வசியற்
சொன்னதாகிய சூத்திரர்கைத்தமனே.

இ-ள். இனிப்பாகிய மண் மறையோர்க்காம் கார்ப்பாகிய மண் அரசர்க்காம் புளிப்பாகியமண் வைசியர்க்காம் கைப்பாகிய மண் சூத்திரர்க்காம்-எ-று. 12

நால்வகைவருணத்தார்க்கு வாசஞ்செய்ய சார்புமனைலட்சணம்.

திடமாகியதென்மனை மாமறையோர்
குடசார்பெறு மேன்மனைகோவரசர்
வடசார்பெறுமாமனை வைசியராங்
அடராகியகீழ்மனை சூத்திரரே.

* வசியரென்பது வைசியரெனக்கொள்க.

இ-ள். தென்சார்பாய் வடக்குப் பார்த்தவாசல்மனை மறையோர்க்காம் மேற்சார்பாய் கிழக்குப்பார்த்த வாசல்மனை அரசர்களுக்காம் வடசார்பாய் கிழக்குபார்த்தவாசல்மனை வைசியருக்காம் கீழ்சார்பாய் மேற்குபார்த்த வாசல்மனை சூத்திரர்க்காம்-எ-று. 13

தானும்தன்கிளை முதலானவர்களும் வாசஞ்செய்யு மிலக்கணம்.

வேறு.

நன்குலமவர்க்குநவி னாயனவனுக்குந்
தன்கிளையில்மூத்தவர் தனக்குமனையிற்றென்
றென்றிசையின்மேல்திசை யிருப்புகின்றிக்கும்
பொன்குலவுமேலையவை பூதலமவர்க்கே.

இ-ள். தன்னில் பெரியவர்களுக்கும் குருக்களுக்கும் தாய் தந்தைகட்குந் தனக்கிளைஞருக்கும் மூத்தவருக்கும் தெற்கு மேற்கு தானிருக்கலாகாது அவர்களைத் தெற்குமேற்கு வைக்கநன்றாம்-எ-று

தெற்குவிடுகுப்பைதிகழ் திருதியிடுவைத்தோர்
திக்குடதிசைக்கெரு மைத்தொழுவியுற்று
மற்கொள்வடமேற்குமலி கூடுணவுகட்டு
பற்புகழ்வடக்கது பசுத்தொழுவியற்றே.

இ-ள். இந்த மனைக்குந் தெற்கே குப்பைகொட்டவும் தென் மேற்கு மூலையில் வைக்கல்போர் கட்டவும் மேற்கில் எருமைத் தொழுவியற்றவும் வடமேற்கில் தானியத்தொப்பை யமைக்கவும் வடக்கில் பசுத்தொழுவமுங் கட்டவும் உத்தமம்-எ-று. 15

இதுவும் வளவுகட்டி யிருக்கத்தான் லட்சணம்.

இயற்றுவடகீழ்த்திசை * யடுக்களையமைப்பாம்
பயிற்றருகிழக்கதனிலாடுகள்பாப்பாம்
செயிற்றெறியவக்கினியில் சமைக்குமதுசேமம்
பயிர்ப்படமொழிந்தபடி பார்த்திடுதனன்றே.

இ-ள். வடகிழக்கில் அடுக்களைவீடு கட்டலும் கிழக்கிலாட்டுக் கொட்டில் வைக்கவும் தென்கிழக்கில் பொக்கிஷ வீடியற்றவும் உத்தமம் கிழக்குத்திக்கில் குளிக்குமிடமும் அக்கினிமூலையில் சமையல் பண்ணுமிடமும் தெற்கில் சயனஸ்தலமும் நிருதிமூலையில் சகலசாஸ்திர முதலானதும் வைக்குமிடம் மேற்கில் போசனமும் பூசிக்கும் வீடுவாய் மூலையில் பசுத்தொழுவமும் வடக்கில் தனதானிய வீடும்; ஈசானிய மூலையில் பூஜைவீடுகட்ட. ராஜயோகமுண்டாம்-எ-று. 16

சனற்குமாரரவஸ்துசொல்லிய சிரகாரம்பவிதி.

லக்னமும்பார்த்தன்னி னலதுலாப்பாவிநிற்க
முக்கியமசப்தமந்தன்னில் முனிக்கொருபாவிகூட
நிற்குமிவ்வேளைதன்னி னீடியசிரகாரம்ப
துக்கமாய்வருமைசோரஞ் சொல்லுவிழப்பர்தாமே.

* அடுக்களையென்பது மண்பாண்டம்.

லக்கினம்ராசி நன்வலசைசமூண்டாகு
மிக்கவேயிடமோராகி விடவிடகளத்திரக்காம்
பொக்குமாமதியருகன் சேரண்பாபிதிருஷ்டிக்குள்ளாய்
நிற்கவேகிரகசாரம் நிகழ்த்திடுமுயிர்தாமே.

மனைகோல அவரவர்கள் ராசிப்பொருத்தம்.

நன்மனையொடுபோக்கெல்லா நாளுடன்ராசிதன்னை
முன்வலங்கொள்வாராயின் முயற்சியாவகருமநன்றும்
புன்னெடுங்காலம்வாழ்வரம் பயின்றநன்மனைக்கட்பேறும்
புன்னிடங்கொள்வாராகிற் பிணியொடுசேர்தலாமே.

இ-ள். மனைக்கு வாசற்பொருத்தம் அவரவர்பேர் வழிபிறந்த ராசி முன்னும் வலமுமாக விருக்கக்கொள்வது நன்றும் பின்னும் இடமாக விருக்கக் கொள்ளில் தீதாம்-எ-று. 17

மனைகோல ஆகாநாள் வேறு.

நன்றாவிலுமனைகோலினு கலனூர்தமிராசி
மூன்றாதிவமாகுதன் மூடரித்திருவுளம்
பின்றாகுதலிடவாகுபல் பேணிமனைகோலில்
பொன்றாகுதல்பொருளாகுவ னுயிராகுதல்போமே.

மனைகோலுமாதங்கள் வேறு.

சித்திரைவைகாசியாடி சிறக்கவாவணியாமிக்க
கைத்தடவைப்பசியிரேடு மன்னுகார்த்திகைபதாகும்
மற்றகவிலாகடை மாசிபோடெட்டுமாதம்
புத்தியாண்மனைகள்கோல புகழிடநன்மைதாமே.

இ-ள். சித்திரை வைகாசி ஆடி ஆவணி ஐப்பசி கார்த்திகை தை மாசி இந்த எட்டுமாதமும் மனைகோல நன்றாம். 18

மனைகோலவும் குடிபுகவும் ஆகாமாதங்கள் வேறு.

கூனியானிபுரட்டாசிமார்கழி
யூணமானவைநான்குமாதமும்
மானியாமனைமனைகுடிதான்புகி
வீணமாகியிடற்செய்புகோய்களே.

இ-ள். பங்குனி ஆனி புரட்டாசி மார்கழி இந்நாலு மாசமும் மனைகோலவும் குடிபுகவும் ஆகாது இதற்கு விரோதமாயும் குடிபுகினும் அல்லது மனைகோலினும் பிணியுண்டாம்-எ-று. 19

முகலெவைக்கேறு.

இலிங்ககாயங்கள்போலே விசைக்கமூடையுங்கூறி
விலங்கநால்வரையுங்கீறு மேலதுமூடிட்டுகொளாக்
குலுங்கமாவிறங்குகாளிற் கொபுரமா...
தலங்குநன்மனைக்கோலத் தக்கவாயிருக்கபோமே.

இ-ள். இலிங்கம்போல் நீண்டவிளையமாய் மூன்றுவரை கீறி குறுக்கே நான்குவரைகீறி இருபத்தேழு தானங்காணும் அடிவரை

யில் முதல் தானத்தில் அவக்கி அசுவனிமுதலாக எண்ணிவர அசுவனி முதல் நான்கும் ஏறுநாள் மிருகசிரம் முகட்டுநாள் திருவாதிரை முதல் நான்கும் இறங்குநாள் மகம் முதல் நான்கும் ஏறுநாள் சித்திரை முகட்டுநாள் சோதிமுதல் நான்கும் இறங்குநாள் மூலமுதல் நான்கு ஏறுநாள் அவ்விட முகட்டுநாள் சதயமுதல் நான்கும் இறங்குநாள் என்றறிக ஏறுநாளில் மனைவாட்ட கூட கோபுரங் கட்டலாம் முகட்டுநாளில முகடுவைக்கலா மிறங்கு நாளில் செய்யலாகாது செய்யில் இடிந்து பாழாய்ப்போம்-எ-று. 20

பிறந்தநாளும் வாரமுங்கூடிய ஆகாநாள் வேறு.

செங்கதிரோன்வாரநாட் பரணிகூடில்
செழுமதியிற்சித்திரைசே யுத்திராடம்
பொங்குபுதனவிட்டம் பொன்வாரங்கேட்டை
புகர்பூராடங்காரிரே வதியினாளில்
மங்கையரைமீனம்புணரில் விதவையாகு
மனையொடுசிற்பவழியில் போகிற்சாவாந்
செங்கற்கண்ணும்பூதிதான் மலடியாவார்
சிறுகுழவிபெறின்மடிக்குந் திண்ணந்தானே

இ-ள். ஞாயிறு பரணியும் திங்கள் சித்திரையும் செவ்வாய் உத்திராடமும் புதனவிட்டமும் வியாழங் கேட்டையும் வெள்ளி பூராடமும் சனி ரேவதியுங் கூடினலாகாது இந்நாள்களில் விவாகஞ்செய்யும் கைம்பெண்ணும் மனைகோலிற்பாழாம் வழிபோகில் மரணமாம் ருதுவானால் மலடியாம் பிள்ளைபிறக்கில் சாவாம். 21

தினப்பொருத்தம் முதலம் வேறு.

பிறந்தநாளிரண்டுநான்கு மொன்பதுமெட்டுமாறுஞ்
சிறந்தசீருளவைமற்றிங் கேடல்சம்பத்துண்டாம்
அறிந்தநால்மற்றுமென்றே ளைந்துமூன்றேழுநீக்கிச்
சிறந்திடாமெ ழிந்தவெல்லாந் திண்ணமாய்ப்போகுந்தானே.

இ-ள். ஜென்ம நாளுக்கு-2-4-9-8-6-இந்நாள்கள் நன்றாம் 3-5-7-இந்நாள் பொருந்தாது மற்றவை பொருந்து மென்ன இப்படி ஒன்றைதான் பத்தாக-27-நாளையும் பிரித்துக்கொள்ளவும்-எ-று. 22

வட்டமுங்கொடியவார மந்தாரமையுறுமினோடு
கொட்டிடங்கிரணம்மற்றல் குத்துமெல்லாநாட்கள்
விட்டியல்வெள்ளிபாடும் விடமுறுவைகத்தனும்
அட்டடிவாவிருத்தை யகலதுநீக்கிக்கட்டே.

இ-ள். சந்திரனையும் குளிகனையும் பரிவேட மிட்டிருந்து கொடியவாரம் மந்தாரம் மறைநதாறல் கிரணந்தீண்டல் கொல்லாத நட்சத்திரங்கள் விட்டிகாணம் வெள்ளிபாடு விஷபடிகை அஷ்டமி உன் இருத்தை இவையாக வென்று நீர் நல்ல நாட்களில் முகூர்த்தங் கொள்ளல் நன்று-எ-று. 23

### தலையற்றநாள் அசையற்றநாள் காலற்றநாள் வேறு.

காலற்றனஉடலற்றன தலையற்றனநாளில்
காமாலுக்கொருமாளிகை கோவினபாழா
மேலக்கருக்குழலாரிதில் அருவாகினுமலடாம்
ஞாலத்தவர்வருபோயினு நலமெய்திடாவவே.

இ-ள். காலற்றநாள் கார்த்திகை உத்திரம் உத்திராடம் உடலற்றநாள் மிருகசிரம் சித்திரை அவிட்டம் 3-தலையற்றநாள் புனர்பூசம் விசாகம் பூரட்டாதி 3 இவ்வொன்பது நாட்களில் மனைகோவில்பாழாம் பெண்திரளில் மலடியாவாள் யாத்திரை செய்யில் துன்பப்படுவார்.

### சுக்கிரன்பாடு வேறு.

சுக்கிரனெதிரேயாகிற் றெல்குடிசாவுகேடாஞ்
சுக்கிரன்வலக்கண்ணாகில் றேன்றிலொருளேசேதஞ்
சுக்கிரன்பின்னேயாகிற் சுகமுடன்வாழ்வதாகுஞ்
சுக்கிரனிடக்கண்ணாகிற் றுக்கமொன்றில்லையென்னே.

இ-ள். வெள்ளியெதிரும் வலக்கண்ணும் மூடமும் ஆகாது மனைகோவிலும் குடிபுகினும் கீழாம் வெள்ளி பின்னும் இடக்கண்ணுமாகில் மிகவும் உத்தமம்-எ-று. 25

யோகபூர்வப்ரதமை முதலட்டமி
யென்பதாகாசம் பூரதசமியா
மாருப்பன்றென்று பஞ்சமியந்தமு
மங்கெதிசஷ்டி மூன்னுவாவீறா
மேகுமிப்படி மூப்பதுபக்கமு
மிடமுனந்தமாம் பூமிதென்கீழ்த்திசை
லோபுயச்சித்திரை நன்மைக்கிவைகேளும்
நோக்கும்தீமிசுக் கிரன்மற்றுநல்லதே.

இ-ள். கிழக்குமுதல் வலமாக எட்டுத்திக்கிலும் பூர்வபட்ச பிரதமை முதலாக அட்டமியளவும் திக்கு 8-க்கு நிற்கும் நவமி ஆகாசத்திலும் தசமி பூமியிலும் நிற்கும் மூற்பக்க ஏகாதசிமுதல் அமரபட்சத்துக்குப்பஞ்சமி யிறுதியாக முன்போல நிற்கும் அமரபட்சத்து சஷ்டி முதலாக அமாவாசை யிறுதியாக முன்போலவே நிற்கும் இப்படி மூப்பதுபக்கத்தையும் நிறுத்தி இதில் தென்கீழ்த்திசைநிற்கும் திதியும் ஆகாசம் பூமியில்நிற்கும் திதியும் யாத்திரை முதலியவற்றிற்கும் விலக்கப்பட்டன அல்லாதபக்கங்களும் வலமும் பின்னும் பூமிசுக்கிரனும் மிகவும் நன்மையாம்-எ-று. 26

### மேற்கோள் யோகினிக்கும் வேறு.

இந்திரன்கனகனக்கினிநிருதி யெமனீர்வாயுவீசானன்
மூன்றுமாகாசம்புவியுடன்பத்து முற்பிறதமைமுதலாக

வந்தபினிந்தமுறைப்படியப்மா வாசியிருந்திதிகன்னி
றற்றிமயோகினியிலேஇரிடப்புவியினுருப்பான்முபுறம்வல்மான்றே

இ-ள். பூர்வபட்ச பிரதமை முதல் பிரதமை கிழக்குதிசை வடக்கு திருதியை அக்கினி சதுர்த்தி நிருதிபஞ்சமி தெற்குசஷ்டி மேற்குசத்தமிவாயுவு அஷ்டமி ஈசானமாகிய அக்கினி மூலையில் நவமிஆகாசம் தசமிபாதாளம் பின்னும் ஏகாதசிகிழக்கு துவாதசி வடக்கு திரயோதசி அக்கினிசதுர்த்தசி நிருதி பௌர்ணமிதெற்கு பின்னும் அமரபட்சப் பிரதமைமேற்கு துதியைவாய்வு திரிதியை ஈசான்யம் சதுர்த்தி ஆகாசப் பஞ்சமிபாதாளம் பின்னும் சஷ்டி கிழக்கு தசமிவடக்கு அஷ்டமி அக்கினிநவமி நிருதிதசமி தெற்கு ஏகாதசி மேற்கு துவாதசி வாய்திரயோதசி ஈசான்யம் சதுர்த்தி ஆகாசம் அமாவாசை பாதாளம் நிற்கும் இந்தயோகினி முன்னும் இடமும் யாத்திரை முதலான எவற்றிற்கும் தீயதுபின்னும் வலமும் நல்லது-எ-று. 27

சுபகாரியங்கள் செய்யவேண்டியதற்கு மூன்றுவிதமாக
சில நட்சத்திரங்களறிய

முதலாவது ரோகணி ஆதிரைபூசம் உத்திரம் ஓணம் அவிட்டம் சதயம் இவை 9-ம் ஊர்த்துவமுகம் இதில் ஸ்தம்பம்பிரதிஷ்டை பட்டாபிஷேகம் உத்தியோகத்திற் பிரவேசித்தல் இராசதரிசனம் வியாபாரம் வீடு ஆபரணம் மெத்தமேல் மெத்த வாசற்கால் தூண் துவசம் தோப்பு சாலை மரமுதலியது வைக்கவும் மற்றுமிவைமுதலாகிய சுபகாரியங்கள் செய்யவும் அபிவிருத்தியாய் வருமென்றறிய வேண்டியது.

இரண்டாவது அசுவனி மிருகசீரம் புனர்பூசம் அஸ்தம் சித்திரை சுவாதி அனுஷம் கேட்டை ரேவதி இவை 9-ம் திரிமுகம்.

இவைகளில் சுவர்வைக்கல் பயிரிட நிலம்வாங்க எருது எருமை குதிரை யானை வண்டிமுதலானவைவாங்கவும் பொன்னேர் கட்டிவிழவும் விரைவிரைக்கவும் பசுமுதலானதுகளுக்கு கொட்டாரங் கட்டவும் யாத்திரை போகவும் ஏரிவாய்க்கால் வெட்டவும் நிலத்துக்கு வரப்பு கட்டவும் இவை முதலிய சுபகாரியங்களைச் செய்ய வுத்தமம்.

மூன்றாவது பரணிகார்த்திகை ஆயிலியம் மகம்பூரம் விசாகம் மூலம் பூராடம் பூரட்டாதி இவை 9-ம் அதோமுகம்.

இவைகளில் நிட்சேபம் வைக்கவும் வித்தியாரம்பஞ் செய்யவும் கிணறு குளம் அகழியெடுக்கவும் களஞ்சியங்கட்டவும் புதையல் வைக்கவும் கிழங்கு முதலானவைநடவும் சங்குஸ்தாபனம் பண்ணவும் இவையுத்தமம்.

இவைகளில் முதற்சாமம்உத்தமம் 2-ம்சாமம் சந்தோஷம்3-மம்அதமம் 4-ஞ்சாமம் அந்திகாலமும் இராக்காலமுங் கூடாது.

ஆரம்பஞ்செய்ய முக்கியமான முகூர்த்த நட்சத்திரங்கள்
இதுகிரந்தங்களிலிருந்தெழுதப்பட்டது.

மிருகசிரம் அஸ்தம் பூசம் சித்திரை அனுஷம் உத்திரம் 3-ம் திருவோணம் அவிட்டம் சதயம் ஆக 11-ம் உத்தமம்.

பொல்லாதநாட்களொழாரம் பொருந்தாதாசிமாதஞ்
செல்லாதவெள்ளிபாடு தியாசந்தியாகுகாலம்
எல்லாருநன்மைவஸ்து வெழுந்திருக்கின்றபோதும்
வல்லாண்மையுடையோரெல்லா மனைகோலலாகாதன்றே.
நடையினில்முக்கால்நாழி நலமுடன்பொசிப்புமுக்கால்
குடையினில்முக்கால்நாழி கூறியமவர்க்கண்முக்கால்
பயாமிசையெழுந்திருந்து பாரதனைவிளக்குமுக்கால்
அட்வுடன்வாஸ்துவுக்கு அகஸ்தியருரைத்தவாறே.

வாஸ்து புருஷன் கிடக்கை.

இங்கனிலிராசிமிக்குத் திசைதனில்காலைநீட்டி
இக்கெதிர்தலையைவைத்தே யிடதுகைகீழதாகப்
பொங்கியவலக்கைமேலாம் பூதலம்விளங்கவென்று
மங்கையேசொல்லக்கேளாய் வாஸ்துவின்கிடக்கைதானே.

இ-ள். வாஸ்து புருஷன் அந்தந்த மாதத்து ராசியில் காலை நீட்டி அதற்கெதிராகிய ராசியில் தலையைவைத்து இடக்கை கீழும் வலக்கை மேலுமாய்க்கிடப்பான்-எ-று. 28

மேற்கோள்.

எத்திசையது மாத மிகவிதானிற்கும்போது
மத்திசைகாலை நீட்டி யதற்கோழி தலையைவைத்து
மெத்தெனவிடக்கை கீழாய் வலக்கைதான்மேலதாக
வைத்திடுங்கண்ணிநேளே வாஸ்துவுங்கிடப்பன்றானே.

வாசல்.

காலதேவாசலாகித் தனக்குமல்சாவுசொல்லுஞ்
சாலவேதலையதாகிற் றுனவன்சாவுசொல்லுங்
கோவியமுதுகேயாகிற் கோவின்றலச்சமுண்டாம்
வாவிபவயிற்றில்விட்டால் வாண்பொருள்சேருமென்றே.

இ-ள். வாஸ்து புருஷன் கிடக்கையில் காலில் வாசல்விட்டால் மனையாளுக்குப் பொல்லாங்கு தலையில் வாசல்விட்டால் கணவனுக்காகாது முதுகில் வாசல்விட்டால் இராஜபயமுண்டாம் வயிற்றில் வாசல்விட்டால் வாழ்வுண்டாம்.

வாஸ்து எழுந்திருக்கு நாளறிய மனைகோலகுடிபுக வேறு.

எற்றுஞ்சித்திரையோர்பத்தி லிருபத்தொன்றில்வைகாசி
பார்த்தவைப்பசியோராடி பதினொருவணியோராறில்
கார்த்திகைபெட்டுதையி யற்றில்மாயிருப்பதனில் (லாம்.
வாஸ்துவுந்தானெழுந்திருப்பான் மனைதான்வாசல்கொள்ள

இ-ள். சித்திரைமீ 1உ வைகாசிமீ 21உ ஐப்பசி 10உ ஆவணி 6 கார்த்திகைமீ 8 தைமீ 12 மாசிமீ 20 இந்ததேதிகளில் வாஸ்துபுருஷன் எழுந்திருப்பான் இந்நாளில் மனைகோலில் அவரவருக்குப் பொருந்தியதிக்கில் வாசலில் விடமாகும்-எ-று. 30

மேற்கோள் உள்ளமுடையான்.

கிடந்தான்மேடமொருபத்துங் கிளரும்விடையின்மூவேழும்
அடங்கோர்கடகப்பதினொன்றி யோராயிற்றேலெட்டிற்
றொடர்ந்தனிருபத்தாமகனாற் கூறுமகரம்பனிரண்டில்
இடந்நானெடுக்காலமென்று மெல்லாதிசைகல்லோரே.

வாஸ்து புருஷன் எழுந்திருக்குஞ்சாமம் தேதி நாழிகை போசனம்.

குண்டமான்குடங்களொட்டங் கொடியதேன்பத்தாகும்
கண்டுகோல்கண்டதாகு நன்மேடவைந்தாகும்
திண்டிற்றசிங்கந்தானே சிரந்தமூவேழதாகும்
கண்டிறன்மறையோர்சொன்னால் வாஸ்துவுமுதிக்கும்பாரே.

இ-ள். சித்திரை 12 நாழிகை 5 வைகாசி 21 நாழிகை 8 ஆடி ஐப்பசி 11 நாழிகை 2 ஆவணி 6 நாழிகை 21 கார்த்திகை 8 நாழிகை 10 தை 12 தேதிநாழிகை 8 மாசிமாதம் 20 நாழிகை 8 இந்நாழிகைக்குமேல் வாஸ்துபுருஷன் எழுந்திருந்து மூனே முக்கால் நாழிகை யிருப்பான் அதுமுதல் முக்கால்நாழிகை ஸ்நானம் 2-வது முக்கால்நாழிகை பூசை 3-வது முக்கால்நாழிகை போசனம் நாலே முக்கால்நாழிகை தாம்பூலம் 5-வது முக்கால்நாழிகை இராச்சிய பாரம் இந்தப்படி சென்றபின் படுத்துக்கொள்வான்-எ-று. 31

கூர்த்தநாண்முகூர்த்தந்தன்னைக் குறைவரப்பார்த்துக்கொண்டு
வாஸ்துவின்கிடையறிந்து மனைதனைக்கோலாறுகில்
சீர்தன்பொருளுங்கேடாம் செய்தவர்மனைத்தும்பாழாய்
மூர்த்தமாய்நாசஞ்செய்து முனியையுந்தொடருமன்றே.

இ-ள். நாள் முகூர்த்தம் வாஸ்துவின் கிடக்கையுமறிந்து மனைகோலானுற் பொருளுஞ்சேதமாம் செய்தவையும்பாழாம் மனைகோலின் சிற்பனையுமனோய்தொடருமென்றவாறு. 32

மேற்கோள்.

வாஸ்துவின்கிடைக்கைமாதம் வாழ்மனைகோலிற்பாழா
மாற்றுவீர்வடுக்கைதன்னில் மதியிலார்மனையெடுக்கில்
சேற்றியானைகலைவன்செய்து நிலகேடாங்குலைத்துபோவார்
ஆற்றியாங்கெழுந்தபோதே அறிந்துமேமனைகோலமன்று

நல்லநாளும் முகூர்த்தமுங்கொண்டு மனைநடுவில்
செல்விப்பார்க்கு மிலக்கணமும்.

நல்லதோர்நாளும் பக்ஷமுகூர்த்தமும்பொருந்தக்கொண்டு
செல்வியேபார்க்கும்போது சரியெழுமோயதாகும்

புல்லியவுமியேகாணிற் பொருண்மிகக்கேடுசொல்லும்
வல்லியவிறகுகாணி லவன்குலங்கேடதாமே.

இ-ள். நல்லநாளும் பட்சமும்பொருத்த முகூர்த்தங்கொண்டு மனையில் செல்லிப் பார்க்கும்போது கரியெழும்பில் நோயாகும் உமிகாணில்பொருட் கேடுவரும் விறகுகாணில் மனைக்குரியவள் குலம் நசித்துப்போம்-எ-று.

திண்டிறலெரும்புந்தேளுஞ் சிதலொடுகட்டைபொல்லா
வண்டமுருகிடும்நேசம் வந்திடின்முற்றும்பொல்லா
மெண்டலைவெலும்புகாணில் வெருமையுங்கேடுமென்று
தண்டமிழ்நூல்கள்வல்லோர் சாற்றினர்தன்மையாலே.

இ-ள். எறும்பு தேள் கரையான் கட்டை முட்டைத் தலைமயிர் வண்டலை எலும்பு இவைகளில் ஒன்று காணிலும் பொல்லாங்கு நேரிடும்-எ-று.

மேற்கோள்.

மண்டேகமாவனைப்பல்லி வனம்புகுசிலந்திவட்ட
நண்டிவைதோன்றுமாகி நன்மனைக்கழகதாகும்
கொண்டதிலுடும்புபாம்பு குறுகுதேளாமைஆரான்
வண்டிவைதோற்றமாகி லனர்பட்டேயழிந்துபோமே.

இ-ள். தவளை அரணை பல்லி சிலந்தி நண்டு இவைதோற்றில் உத்தமம் உடும்பு பாம்பு தேன்கூடு தேள் ஆமை பூரான் இவைகள் தோற்றில் அந்தமனை அக்கினியா லழிந்துபோம்-எ-று. 35

ஈண்டியதனைத்தைக்காணி லின்பமேவருவதாகுங்
காண்டகுதனங்கள்சேருங் கல்லுநூதானியங்கள்செங்கல்
பாண்டியன்பசுவின்கொம்பு பலதானியங்கள்செங்கல்
வேண்டியலோகங்காணில் மிகுத்திடுஞ்செல்வந்தானே.

இ-ள். தனப்புதயல்காணில் இன்பமுண்டாம் தவளைகாணில் உடைமையுண்டாம் பசுவின்கொம்பு பலதானியங்கள் செங்கல் பஞ்சலோகம் ஒன்றுகாணில் மிகுந்தசெல்வமுண்டாம்-எ-று. 36

பொன்னுடவெள்ளிவசப்பு பொருந்திடநன்மையாகும்
பின்னுமோரிரும்போடீயம் பித்தளைமத்திபந்தான்
கன்னல்சேர்மொழியினாளே கருங்கல்லோடெரும்புகாணின்
மன்னியமனையாள்சாவள் மாளுவன்கணவன்றானே.

இ-ள். பொன் வெள்ளி செம்பு இவைகளிலொன்று காணிலுத்தமம் இரும்பு ஈயம் பித்தளை இவைகளிலொன்று காணில் மத்திபம் கருங்கல் எலும்பு இவை காணில் மனைக்குரியவன் மனைவி யிறப்பது மன்றி அவனும் வியாதியால் மெலிந்திருப்பான். 37

குழியில் நீரும்பூவும்விட்டு பலாபலனறியும் விதி.

வாழ்மனைநடுவேநான்கு வடிவுடனொருமுழத்தில்
ஆழமும்கலங்கெல்லி தண்ணீர்பூவும்விட்டால்

வாழ்கதிரோனைநோக்கி வலம்புரியோடில்வாழ்வாம்
சூழ்புவியிடமாய்ச்சுற்றிற் றொல்லைநோயாகுமன்றே.

இ-ள். மனைக்குநடுவே சதுரமாக ஒருமுழ அகலமும் ஒருமுழமும் ஒரு முழமாகக்கெல்லி அக்குழியில் தண்ணீரும் பூவும் விட்டால் பூவும்நீர் வலமாகச் சுற்றிவரில்நன்மை இடமாகச் சுற்றிவரில் துன்மை-எ-று. 38

மேற்சொல்லியகுழியில் சாயரட்சைநிறைய
நீர்விட்டுப்பார்த்தல்.

நிறையநீரிட்டுவைத்து நீள்கதிரெழுந்தபோது
முறைமையாய்வந்துபார்த்தாம் முப்பிடிநீரொன்றுந்
தரையினிற்வற்றியக்கால் றாழ்வறப்பிளக்குமாகில்
திரையொடுநோயாமென்று தெரிந்தவருரைத்தவாரே.

இ-ள். மேற்படிகுழியிலந்திப்பொழுதில் நிறையநீர்விட்டு வைத்து சூரியவுதயத்திம்வந்து பார்த்தால் மூன்றுபிடி நீருந்தில் மிகவுநன்றும் நீரெல்லாம் வற்றிப்போனால் பொல்லாங்குண்டாம் நீர் வற்ற பூமிபிளந்திருந்தில் சிதைநோடு நோய்முதலாகிய துன்பமுண்டாம்.

மேற்படி குழியில் எடுத்தமண்ணையடுத்தல்.

அளந்ததோர்குழியின்மண்ணை யகழ்ந்தகமேலேயிட்டால்
வளர்ந்திடிற்செல்வமுண்டா மொந்திடின்மிகுதியில்லை
குளந்தனிற்குறையுமாகில் குறைந்திடுஞ்சம்பத்தென்றே
புளந்தனிற்கருதிகல்லோ ருரைத்தனர்புவியின்மீதே.

இ-ள். முன்னெல்லின் குழியிலெடுத்த மண்ணைக் கொட்டினால் மண்மிஞ்சியிருக்கில் லாபமுண்டாம் ஒத்திருக்கில் வரவும்முதலும் சமமாம் குறைந்திடில் செல்வங்குறைந்து செலவுமிகும்-எ-று. 40

மனைகோலும்போது கடைக்கால் சங்குஸ்தாபனம்.

வ-ம். பரவாஸ்துபுருஷனை ஒன்பதாகப்பகுத்து சிரசிலிருந்து நாலுபங்குதள்ளி ஐந்தாம்பங்கை மூன்று கூறுக்கி சாபக்கம் இரண்டு கூறுதள்ளி மூன்றும்பங்கை கடைகாலாவது சங்குஸ்தாபனமாவது செய்யும் உத்தமம் மேற்படி அரவாஸ்து எப்போது மசையாமல் படுத்திருப்பான்.

கடைக்கால் சங்குஸ்தாபனமாவது.

வாஸ்து ஒருமனையின் ஈசானிய மூலையில் சிரசும் நிருதிமூலையில் காலுமாக இடங்கையை கீழ்வைத்துப் படுத்திருப்பன் சிரசிருந்து தாபங்குதள்ளி 5-பங்கை மூன்றுபங்காகசெய்து இரண்டு தள்ளி மற்றபங்கில் கடைக்கால் போடவும் சங்குஸ்தாபனம் பண்ணவும் சுபம். 42

சிற்பாசாரியனிலக்கணம்.

பண்ணியபொற்பூநூலும் பௌத்திரங்கையிலிட்டு
சென்னியிற்சிரையதாகிச் செய்யதோர்பிறந்தனுகி

மன்னியகுலமுமிக்க மனமிகத்தூய்யனாகி
வன்னியசாதிகூடா தறிந்தவச்சிற்பிதானே.

இ-ள். பொற்பூவணிந்து விரல்தனில்மோதிரமும் பின்குடுமையுமுடையவனாய் சிவந்த மேனியனாகிய வமிசமும் நயனகுணமும் தூய்ய மனமுமுடையவனாய் அன்னிய சாதியரைச் சேராமல் அறிவுள்ளவன் சிற்பாசாரியரம்-எ-று. 41

இதுவுமது.

சுத்தமாய்வேதமோதித் தூய்யதோராடைபூண்டு
சித்தமும்வாக்குமொன்றாய்ச் சேர்ந்துசோடங்கடிந்து
நித்தமனுஷ்டானங்க ளிரைவுடன்பூசையண்ணி
வித்தகநூலைக்காலை விளம்பிடிவியற்கையாமே.

இ-ள். சிற்பாசாரி சுத்தமாயிருந்து வேதமோதி பரிசுத்தவஸ்திரம் அல்லது காமமடியுடுத்தி தெளியுஞ் சிறப்புடையவனாய் மனமும் வாக்கும் ஒருமைப்பட்டு கோபத்தைநீக்கி நித்தியானுஷ்டானமும் தெய்வபூசையுந் தப்பாமல் முடித்து சிற்பநூலை காலையில் ஓதவேண்டும்-எ-று. 42

முழக்கோலளவு.

அன்னியவணுவும்பல்லு நுண்மணவெள்ளுநெல்லு
பண்ணியதுவரைபெற்றாற் பாவியவிரலதாகும்
எண்ணியவாறினாலே யிசைந்தக்கால்முழமதாகு
நண்ணியகாலினாலே நாலினான்முழக்கோல்கொள்ளே.

இ-ள். முழக்கோலாவது அணுவு 8-கொண்டது புன்னுனி 8-கொண்டது நுண்மணல், நுண்மணல் 8-கொண்டது எள்ளு, எள்ளு 8-கொண்டது நெல்லு, நெல்லு 8-கொண்டது துவரை, துவரை 8-கொண்டது விரல், விரல் 6-கொண்டது கால்முழம், கால்முழம் 4-கொண்டது ஒருமுழம்-எ-று. 43

வேறு.

நாலங்குவிரல்கிடருமுழஞ் சூத்திரர்க்காகும்
வளம்பிரஜாபத்யமும் வணிகர்தமக்காகும்
அளந்தகனுமுட்டிவிர லரசர்களுக்காகும்
வியம்பியதனுக்கிரகம் வேதியருக்காமே.

இ-ள். கிட்குவென்னு மிருபத்துநாலு விரல் கொண்டது வேளாளருக்கு முழமென்று சொல்லப்படும் பிரஜாபத்தியமென்னும் 25-விரல் கொண்டது வைசியருக்கு முழமென்று சொல்லப்படும் தனுமுட்டி 29-விரல் கொண்டது அரசர்களுக்கு முழமென்று சொல்லப்படும் தனுக்கிரகமென்பது 27-விரல் கொண்டது பிராமணருக்கு முழமென்று சொல்லப்படும். 47

சொன்னதோற்றுவரையெட்டு விரலெனவறிந்துகொள்ளாய்
தன்னியவிரல்களாறு கொண்டதுசாண்தரும்
மன்னியசாணிரண்டு கொண்டமுழமதாகும்
அன்னியமில்லாமன்ன மாய்ந்துகொளிதுபோற்றுனே.

இ-ள். துவரை 8-கொண்டது விரல் விரல், 9-கொண்டது சாண் சாண், 2-கொண்டது முழமிதுபோற் பகுந்து கொள்ளவும்-எ-று.

கோயில்கோபுரமனை அளவுமுழக்கோல்.

தாபரமுதலாயுள்ள சமயமுமலையுமிக்க
கோபரங்கூடஞ்சாலை மாளிகையளிக்கச்சொன்னேம்
தாபரஞ்சிமயமெல்லாங் கிடருவின்விரல்களாலே
கோபுரங்கூடமெல்லாங் கிடருவின்விரல்களாலே.

இ-ள். தாபரம் சிமயம்மனைசாலை மாளிகை இவைகளை கிடருவின் விரலாலளப்பது கோபுரம்கூடம் இவைகளை அறுவிரல் முழத்தாலளப்பதுயிதில் பனிரண்டு விறலுக்கு விசத்தியென்று பேரும் யிதிவிரட்டி 24-விரல் கொண்டது கிடருவென்பதாம்-எ-று. 46

முழக்கோல் மரங்கள் வேறு.

மூங்கிலிற்செய்தகோல்கள் மூதுமறைவேதியர்க்காம்
தீங்கிலாஆச்சவின்கோல் திரைகொளுமரசர்க்காகும்
வேங்கையிற்செய்தகோல்கள் வேளாளர்க்குரியதாகும்
பாங்குருதேக்குவின்கோல் பகர்ந்திடில்வணிகர்க்காமே.

இ-ள். மூங்கிலிற் செய்தகோல் பிராமணருக்கு ஆச்சாவின் கோல் அரசர்க்காம் தேவக்குருவின்கோல் வணிகர்க்காம் வேங்கையின்கோல் வேளாளருக்கும்-எ-று. 47

இதுவுமது.

பொருந்தியமட்டக்கோல்தான் புலிவேங்கைதேக்கோட்டச்சா
வருந்தியபுலிவேக்கர்க்கா மன்னவர்க்கறச்சாவாகும்
விரும்பியவணிகர்தேக்கு வேளாளர்வேங்கையாகும்
இரும்புதான்றேவர்க்காகு மியல்புடனவைத்துக்கொள்ளே.

இ-ள். மட்டக்கோலுக்குரியவை புலிவேங்கை தேக்கு ஆச்சா இவை நான்கு மரமாம் இவற்றுள் புலிமாவின்கோல் மறையோர்க்காம் ஆச்சாவின்கோல் அரசர்க்காம் தேக்குவின்கோல் வணிகர்க்காம் வேங்கையின்கோல் வேளாளருக்காம் இரும்பினாற் செய்தகோல் தேவருக்காம்-எ-று. 48

வேறு.

மட்டமதுகோலினை வளம்பவுரைக்கில்
விட்டபடிமத்துவிரல் மேவுமொருதலையா

மெட்டுவிரலொருதலை யதிப்படிகொள்மூலை
பட்டுவளைசதுரமெனப் பார்த்துவரைஸ்லையே.

இ-ள். மூலைமட்டக் கோலளவு சொல்லுமிடத்து ஒருதலை பத்துவிரல்நீளம் ஒருதலை ஆறுவிரல்நீளம் நடுமூலை பட்டுவளைத்து சதுரமாக்கி விரலளவுபார்த்து வரைந்துகொள்-எ-று.

மேற்படி அளவுநூற்கயிறு.

தாலவுரிகேதகை சணற்றொடுமெருப்பின்
நாலிவைமேலுறிகல் லாத்தியறிநூலால்
வாலியகற்றினை வலம்பயமுறுக்கி
யேலவாவின்னுனியாதர மொழிபின்னே.

இ-ள். பனை தாழை கணல் மாநள் ஆல் ஆத்தி இலத்தி இவைகள் நாரினோடு பருத்திநூல் கூட்டுவிரல் நுனிப்பிரமாணத்தில் கயறு முறுக்கிக்கொள்ளவும்.

முப்பிரியதாயொரு கயிற்றினைமுறுக்கின்
விப்பிரர்கள்விண்ணவர்கள் மன்னவருக்காகும்
வைப்பிரியிருப்புரிகள் வணிகமுழவர்க்கே
யெப்புறுசிதொள்கவினி யோயியுரைக்கின்றேன்.

இ-ள். முப்புரிக்கயிறு தேவர்களுக்கும் மறையோர்க்கும் மன்னவருக்குமாகும் இருப்புக்கயிறு வணிகருக்கும் வேளாளருக்கும் என்றவாறு.

சங்குஸ்தாபனம் வேறு.

சங்கிட்டீளமுன்னன் சாற்றியவிரலினலே
தங்கியமூன்றுள்காக்க கொண்டருபருமனகு
மங்கதனுளின்மூன்றி மற்றலைசுற்றலாமே
வந்ததுதாகமோகங் கொண்டதோயூசிதானே.

இ-ள். சங்கிவிநீளம் பனிரண்டு விரல்பருமனும் இது என்று முகமால் தலையில்சுற்றும் இதில் மேலூசியில்நீளம் ஒருவிரல் கொள்வது என்றவாறு.

வேறு.

வானுடையதேவர்முதல் மானிடற்குமாகுந்
தானுடையசங்குமரந் தக்காதைச்சொல்லில்
ஆனவரசாமா வத்தியுடன்சிக்கல்
கானகருங்காலிபாம்மை யடைந்துகொள்ளே.

இ-ள். தேவருக்கும் மானிடருக்கும் சங்குமரமாவது அரசு ஆல் அத்திசிரசில் கருங்காலிபாம்மை இவையாம்-எ-று.

வேறு.

பண்ணிப்பங்குலைக்காப் பார்தனைமட்டக்கி
யெண்ணியேவொருகோல்கொண்டால் கல்முத்ததுவேயருக்

தண்ணியமட்டநீள மொக்கவேகொண்டபின்பு
இண்ணியபொருளினாலே நீங்கிலாச்சங்குவைவே.

இ-ள். சங்குவைக்கும்போது நிலத்தை மட்டஞ்செய்து ஒரு கோல்முறை அகலம் நீளமட்டம் ஒக்கக்கொண்டு பொருள் வைத்து சங்குவைக்கவும்-எ-று.

வேறு.

ஆவணியுமைப்பசியு மானபெரிமாதம்
பூவணியில்வாழ்க்கிடு புராதனராகவக்கார்
யாவணியிலுள்தவிர மற்றவைதேவாங்கார்
தாவணயராய்மனையில் சங்குகடலாமே.

இ-ள். ஆவணி ஐப்பசி கார்த்திகை இந்த மூன்று மாதங்களில் சங்கு கடல் மனிதருக்காம் மற்றெல்லா மாதங்களுந் தேவர்களுக்காம்-எ-று.

கெற்பம்வைக்கபேழை.

அவலணிலெழுந்தமண்ணு மானையின்கோட்டுமண்ணு
நிலனுறுபுற்றுமண்ணு னீடியகட்டின்மண்ணு
குலவியவெருதுமண்ணுங் கூட்டிசேர்த்துக்கொண்டு
பெலமிகுகெற்பம்வைக்க பேழையைப்பண்ணிக்கொள்ளே.

இ-ள். நண்டுகொண்டு மண் யானைக்கோட்டுமண் புற்றுமண் கறுப்புமண் எருதுக் கோட்டுமண் இவை யெல்லாங் கூட்டிச் சேர்த்து கெற்பப்பேழை செய்து கொள்ளவும்-எ-று.

பண்ணியகெறப் பேழை யைந்தேழோடொன்பதாக
வெண்ணியபதினை தாக வமையினைப்பண்ணிக்கொண்டு
[illegible]ணியபணியும் [illegible]ன்று நற்பலதானியங்கள்
[illegible]வடக்[illegible] வன்று செப்பினார்கலைவல்லோரே.

இ-ள். ஐந்தறை [illegible]றை ஒன்பதறை பதினைந்தறை இவற்றி லொன்று பொருந்திய அறைபண்ணி அதில் நடுவறையில் பொன் னும் மணியும் சுற்றிலுமிருக்கும் அறைகளில் பலதானியங்களு மிட்டுவைக்கவும்-எ-று.

சாலையின்மையும்பற்றித் தன்னிலகரைபற்றிக்
கோலியேயொன்பதாக குறித்திடுமேற்குநாலு
வாலியக்கிழக்குமூன்று தெற்குமேநான்குவிட்டுச்
சீலமாம்வடக்குமூன்று நடுவதுகெறபஞ்செய்யே.

இ-ள். சாலையில் முதல் மையத்தைப்பற்றி பின்பு அகலப் பற்றி அதை ஒன்பது கூறுசெய்து மேற்குநான்கும் கிழக்கு மூன் றும் தெற்கு நான்கும் வடக்கு மூன்றும் விட்டு நடுவில் கெற்பஞ் செய்யவும்-எ-று.

இந்த சாஸ்திரஞ் சொன்ன சிற்பியானவன் செய்வானாகில் மனைக்குற்றம் பணிக்குற்றம் விலக்குற்றம் இவைகளால் வந்த தோஷங்களையும் தள்ளுமென்றறியவும்.

முளைகடாவுமளவு முளைக்கயிறுகால்.

பகர்ந்ததோர்முளைக்குநீளம் பதினொருவிரல்தொடங்கி
யிகழ்ந்ததோர்விரலாலேற்றி யிருபதுநான்குங்கொள்ள
மகிழ்கடைவைகடாபோது வாஸ்துவின்வயிற்றுக்கெல்லி
புகந்துதென்மூலைதன்னை யுற்றுமுன்னியமாய்த்தாக்கே.

இ-ள். முளைக்குநீளம் 11-விரற்றொடங்கி ஒருவிரல் ஏறிட்டு இருபதுநான்கு விரலளவுங் கொள்வது முளைகடாவும்போது வாஸ்துவின் வயிற்றிற்கெல்லி பின்பு தலைமேல்மூலையில் கடாவி தென்கீழ் வடகீழ் மூலைகளின் கடாரியவிடியும்-எ-று.

மாமிசத்தால் மருவாசல்தோஷம் வேறு.

கொட்டுமுனைதட்டிபறித்தல் கொத்தேபிடித்தகயிற்றுதல்
நட்டுகாலைபின்பறித்த நடுவிதாணிமிர்மிகசத்தம்
விட்டவாசல்தனையடைத்து வேறேவாசல்தனைவிடுத்து
சட்டமனையாடனையிழக்குந் தாமுமானந்தப்பாதே.

இ-ள். கொட்டின முளையைத் தட்டிப் பறித்தலும் செவ்வையாகப்பிடித்த கயிறு இற்றலும் ஒரு காலைநட்டு அதை பின்பறித்தாலும் மனைநடுவில் ஒரு மரத்தை இசைத்தாலும் விட்டவாயலை யடைத்து வேறொருவாசல் விட்டாலும் பொல்லாததோஷம்-எ-று.

முகடுகுத்திமாயிறுகயிறு வேறு.

கூறுவிரலான்முகடு கொண்டுமெறுதாடி
யாலுதயிராளையகள் வாழ்மனையொடுக்கில்
ஈருபடுநோய்கலியு மில்லையனுமில்லாள்
வேறுபடுமெம்மைக விளம்புவதுமெய்யே.

இ-ள். முகடுகுத்தாகவும் மாறுகயிறாகவும் மனையெடுக்கில் பொல்லாததோஷத்தைக்காட்டும்-எ-று.

மறுபடியும் முளைக்குறிநான்குறி வேறு.

குடக்குத்தெற்குமனைபேரிற் குற்றமேவேதாறுண்டாய்
வடகிழக்குமனைபேரில் வசியமுண்டுமிகநன்றாம்
எடுப்புஞ்சாய்ப்புமிகவாகா தெனனுக்கருமமிகவுண்டாம்
முடிக்குங்கோடிமறுமாடி மூலைவாங்கி லுக்கிதே.

இ-ள். மனைக்கு மேற்கு தெற்கும் பெயர்த்து கட்டலாகாது வடக்கும் கிழக்கும் பெயர்த்துகட்ட நன்றாகும் எடுப்புஞ் சாய்ப்புமாக நிற்கிலும் கோடிவருமாடி மூலைவாங்கிப்போம் நிற்கிலுங் ஆகாது-எ-று.

நான்கு வருணத்தாரும் பூநூல் கொள்ளும்விதி.

மறையவன்மற்றைநூலா லகன்புரிமூன்றுங்கொள்க
விறையவன்றமதன்று விருபுரியதுவேகொள்க
பெறுமெனவைசியர்க்காகிற் பெண்ணைநூற்புரியிரண்டாம்
அறிவுளவுழவர்க்காகி லாத்திநூற்புரியிரண்டே.

இ-ள். பிராமணர்கள் தெற்பைநூல் முப்புரிகொள்க அரசர்கள் சதம்பைநூல் இருபுரிகொள்க வணிகர்கள் பனைநார் இரிபுரிகொள்க சூத்திரர்கள் ஆத்திநார் இருபுரிகொள்க-எ-று.

மட்டநீர்கொள்ளவேண்டின் மதித்தினைதளத்தைநீயும்
திட்டமாய்ச்சமிரமாகித் திரமதாணையிலேதான்
வெட்டினகுழியைக்கெல்லி வேகமாய்நீரைவிட்டு
பட்டமாய்மூலைகடாவிச் சார்பினிற்கயிறுகட்டே,

இ-ள். கட்டங்கொள்ளும்படி நடுவில் சதுரமாகக் குழியைக் கெல்லி தண்ணீர்விட்டு நாலுதிக்கும் மூலைகடாவின கயிறு கட்டவும்-எ-று.

நன்றெனவிட்டநீறு நாட்டியேதண்ணீர்மேலுந்
சென்றுமேமூலையைத்தொட்டுச் சிதறிப்போகுமாகில்
மன்றமாபதினிலத்துவன் மதித்ததோர் நூலார்கண்டு
குன்றமர்குமரபாரு குறிப்பிட்டதறிந்துபோற்றே.

இ-ள் நடுவிட்ட நீரவழியுந்தேடி நான்குதிக்கும்பரந்து மூலையிலும் கயிற்றிலும் தாக்கி நின்றால் தளமட்ட மொக்கும்-எ-று.

கூறைக்கால்நாட்டல் முகூர்த்தஞ்செய்தல்.

அகலத்தையொன்பதாக்கி யதிலொன்றுகுறைக்ககாலம்
பகலுற்றகுழிக்கிரண்டு போக்குமேலாறுகூற்றின்
றிகலுற்றேகவர்வதற்கு மேலதுவொன்றுபோக்கி
சகலர்க்குநடுவேவையத்து கூற்றெனச்சாற்றினோரே.

இ-ள். அகலத்தைப்பிடித்து 9-கூறுசெய்து அதில் ஒன்றைக் குறைக்கலாம் கீழே குழிகாட்டுகைக்கு 2-கூறும்போக்கி நடுவில் 9-கூறு நிறுத்தவும்.

மூலைக்கால்நாட்டும் விதி.

முன்னியமுகூர்த்தந்தன்னின் முதல்வனைபூசைசெய்து
பொன்னொடுமணியும்பாலும் பொழிவுடன்குழியிற்செய்து
தென்மேற்குமூலைக்காலைச் சிறப்புடன்முந்தநாட்டி
தென்கீழும்வடகீழ்மேலும் மூலையுந்தெரிந்துநாட்டே.

இ-ள். நல்லமுகூர்த்தத்தில் விநாயகரைப் பூசைசெய்து பொன்னும் நவமணியும் பாலுக்குழியில்விட்டு முதல்தென்மேற்கு மூலைக்காலைநாட்டி தென்கீழ்மூலை வடமேல் மூலைக்காலும் அடைவு சேரநாட்டவும்-எ-று.

மாயிசைத்தல்.

இசைமுதுதலைகீழாக விளைந்தலைமேலதாக
பசையுடனேரமாகிப் பருந்தலையில்லதாக
வசைமுறவிசைப்பாராகி வரவொடுசம்பத்துண்டாம்
பிசைகுழல்வருமேயாயிற் பிணியொடுகேட்பர்தாமே.

இ-ள். மரமிடைக்கும்போது முறுதலை கீழாக இளந்தலை மேலாகவும் ஓர் இசையாகில் முதலையுள்ளும் இளந்தலைபுறத்தியு மாக இழைப்பதானறு இதற்குப் பிசகுவருமாகி லப்பிணியுங்கேடு முண்டாம் இளந்தலைகீழும் முறுதலைமேலுமாக இழைப்பாராகில் நோயுண்டாம்-எ-று.

முறுதலையிரண்டுந்தென்மேல் மூலையிற்கூடவைத்து
திருமுறவிசைக்கும்போது தென்றலைமேலதாக
மதியிளந்தலையிரண்டும் வடகீழாமூலைதன்னில்
விதிவடதலைகீழாக விளம்பினர்பிணைக்கத்தானே.

இ-ள். முறுதலை இறந்தென்மேல் மூலையில் பொருந்த வைத்து தென்றலைபோலாகவும் இளந்தலையிரண்டும் வடதிசைமூலை யிற் பொருந்தவைத்து வடதிசைகீழாகவும் பிணைக்கவும்-எ-று.

இளந்தலையிரண்டும்வேறே யிடத்தினிலிசைக்கலாகா
வளம்படுமுதலைகள் வருத்தந்தென்மூலையன்றி
விளம்பிரேழிசைப்பாராகில் வெறுமைநோய்நலியுநன்றே
தெரிந்தவனுரைக்கலுற்றார் சிற்பிநூலையாய்ந்த.

இ-ள். இளந்தலையிரண்டும் வடகீழ்மூலையொழிய வேறிடத்தி லிசைக்கலாகாது முறுதலை யிரண்டும் தென்மேல் மூலையிலே யொழிய மற்றவிடங்க ளிசைக்கமாளாது இசைக்கில் வருமை நோயுண்டாம்-எ-று.

பாப்பிளிற்பாதிதன்னை பன்னிருகூறுசெய்து
திறப்புறுமைந்துகூறு நின்றதுமேற்றமஞ்சாம்
இறப்பமாஞ்சக்கையாறு யேழுதாநடுவாங்கையா
முறப்புகோடாகையெட்டு மென்றிதுகோடிதானே.

இ-ள். பறப்பிறப்பாதியைப் பனிரெண்டு கூறுசெய்து இதி லைந்துகூறு ஏற்றமஞ்ச ஆறுமஞ்சாகை ஏழுநடுவாக எட்டுமோயி சைக்கோட்கை ஒன்பதுகோடி யென்பதாம்-எ-று.

மாதத்தில் நன்மைதீமையறிந்து உத்திரமிணைக்கும் விதி.

மாடமாளிகைநாதல் மதித்ததோர்மண்டபங்கள்
நீடியமயனுர்சொல்லு நெறிதனையியம்பக்கேளீர்
கூடியமரங்கடன்னிற் குணங்களாநன்மைதீமை
ஆடகமயிலினாலே யறிந்தவருரைக்கலுற்றார்.
உத்தரமிசைக்கவேண்டி லுன்னிளீர்கேளுமெல்லாம்
அத்தனையகலந்தன்னை யளந்துநற்சதுரமாக்கி
வைத்தனகன்னனேரே வடிவுவாற்கண்டு
இத்தனையென்பதாக விசைந்தனகுடுமியாமே.
உத்தரமிசையிலாணி யுலகத்தில்வலமதாக
அத்தநாளினுதேயாள்க மாக்கியமுண்டாம்

உத்தரமிசையிலாணி உலகத்திலிடமதாகிற்
சத்துருபொருத்தபின்னுஞ் சாலைப்படுகைதிண்ணம்.
மையனேமனைகடன்னி மாத்திரைவிசைப்பாராகில்
கையதிற்பொருளும்போகும் காவலன்றூறுஞ்சாவான்
பையவேயாவலமையும் பாரியப்பாதிகன்னில்
செய்யவேகடன்வல்ல சேர்ந்ததோரிசையுன்வானே.

அடியதுகிழதாகு மக்கிரமேலதாகும்
படிமுதலானதெல்லாம் பகைத்துடவிசைத்துக்கொள்க
முடியவேவோரையாகில் மூளமுமூள்ளேயாகும்
கடகவாழ்குழலினுலே கண்டவையுரைத்தவாறே.

கால்வைக்கதைக பெற்றநாள் இலக்கணம்.

மதியினிற்சனர்கட்டி வன்புதன்னைபலைவத்து
விதியினுல்வெள்ளிமேய்க்து வியாழத்திற்குடியேபுக்க
சதியுடன்வகைவரவத்து தனிலெலிமூட்டினுலும்
பதியெதுமித்திரன்போற் பதிவுடன்வாழ்வார்தானே.

இ-ள். திங்களில்கால்நாட்டி புதனிற்கூரையைவைத்து வெள்ளியில் மேய்ந்து வியாழந்திற் குடிபுகுந்தால் தேவேந்திரன்போலே அஷ்டயிஸ்வரியமும் பெற்று நீடூழிகாலம் செல்வம் நீங்காமல் கீர்த்தியுள்ளவனாய் வாழ்வான்-எ-று.

வாக்கால்வைக்கும் விதி.

வந்ததோர்மனையின்நீளம் வகுத்ததோர்முழங்கடன்னே
ஒன்பதுகூறுசெய்து ஒருமூன்றுவிடத்தேபோக்கி
நின்றதோர்வலத்தினைந்து நீக்கியேபின்றுகூறில்
இன்பொடுவாசலாக அறிந்தவருரைத்தவாறே.
உணமில்மனையில்வந்த முழக்கனையளந்துகொண்டு
பாணிடாதமக்குவாசல் மைத்திலிடத்தேயாகும்
தேனமர்குழலினுளே தேவர்கடமைக்குமையை
மானதுவாசலென்றே மதுத்தவருரைத்தவாரே.

கதவுக்கு கெம்புமினோ எங்களுக்கு இரட்டைத் துவாரமிடும் விதி.

வேறு.

நாலுக்குமூன்றுக்கு நடுவுக்குநடுவே
காலுக்குமநடுவுக்கும் மடைக்குமிதுவே
மேலுக்குங்கீழுக்கு நடுவுக்குமடலாம்
ஞாலக்குநாலுக்கு முறுமையுத்துமைவயே.

பாமதில் ஆண்பெண் அறியவேறு.

அடிதலைமிரண்டுமொத்தாலாண்மரமாகுமென்பார்
அடிவரிக்திடியேபெண்ணு மையதுமலைபருக்கும்
வடிவுடன்றானுங்காணு மலைகளுத்திரங்களேபேசி
வடிவுடன்விட்டசட்ட மற்றவைக்கதுமாமே.

அகலத்தோர்பாதிதன்னை யிருகூறுசெய்து
சகலற்குணமத்துகூறே தக்கதோரேற்றமஞ்சா
மிகலுமஞ்சாகைபாரு மேழதாகவொங்கைக்கு
மூகலுங்கோடாகையெட்டு மொன்பதுகோடிதானே.
அஞ்சினிவிரண்டதான வகைக்குஞ்சற்றளவுநீளம்
மிஞ்சிரமூழமூன்றுக வேதித்தொன்றையேத்தித்
தஞ்சலமிலத்தோடேட்டுத் தாட்பாணற்றக்காலாம்
மிஞ்சிடாதிரண்டுதானும் பிறவாணையென்னலாமே.

ஆண்மரம்.

காணமேமரங்கடன்னைக் கருத்துடனறியும்போது
தூணெனத்திரண்டுநின்று சுத்தமாயொழுங்கதாக
நீணுயர்பாரின்மீது னின்றிடுமாகில்ல
ஆணமரமென்றுசொல்லி யமைந்தனர்வேதத்தோரே.

இ-ள். மரமானது தூண்போலத் திரண்டுநீண்டு ஒழுங்கா யிருக்குமாகில் ஆண்மரமென்று சொல்லப்படும்-எ-று.

பெண்மரம்.

கண்ணிமாமரங்கடன்னைக் கருதியேபார்க்கும்போது
விண்ணுமையதுபொருத்து மேலது சிறுத்துநின்றால்
பெண்ணெனவருத்தநன்றாய் பெருமையாயோகலம்பின்
ஆண்டெனத்தமிழைபோது தாயநுமையன்சொன்னூலே.

இ-ள். மரமானது அடிபெருத்து நுனியானது சிறுத்திருந் தால் அதைபெண்மரமென்று சொல்லப்படும்-எ-று.

அலிமரம்.

இரசியவாங்கடன்னை யியப்புடன்பார்க்கும்போது
நிலமதிற்சிறித்துநீண்டு நெரிமையதாகிபின்னுந்
தலையதுமிகப்பெருத்து தானதுநிற்குமாகில்
அலிமரமாகுமென்றே யறைந்தனர்வேதத்தோரே.

இ-ள். மரமானது சிறுத்து நீண்டு நெடுமையாகி தலைபருத் திருந்தால் அதை அலிமரமென்று சொல்லப்படும்-எ-று.

கருதுமாண்மரமேயாகில் காலொடுதூக்காகும்
மருவுபெண்மரமேயாகில் வளையுத்திரம்பொதிகைக்காகும்
விரவலிமரமேயாகில் விட்டமுஞ்சட்டமாகும்
உரவியகைகளாகி லுற்றமரங்களாமே.

இ-ள். ஆண்மரமாகில் கால்களுக்கும் தூணுக்குமாகும் பெண்மரமாகில் வளை உத்தரம் பொதிகைக்குமாகும் அலிமரமாகில் விட்டம் சட்டத்திற்குமாகும் கைகளுக்கு உத்தமமரங்கள் நன்று என்றவாறு.

சேமரந்தேவற்காகும் மறையவர்வேம்பதற்கும்
மகாமகன்றேக்கதாகுங் குணமுள்ளவிலுப்பைசெட்டி

பூமகள்வேங்கையாகும் பொருசாதிகாஞ்சிருக்குந்
தாமமராம்விமேருக் தருமயன்சாற்றுவாரே.

இ-ள். மாமரம் தேர்களுக்காகும் வேம்பு பிராமணர்களுக்காகும் தேக்கு அரசர்களுக்காகும் இலுப்பை செட்டிகளுக்காகும் வேங்கை வேளாளருக்கும்-எ-று.

வீடுகட்டுவதற்குதவா மரங்கள்.

அத்தியுமாலுமிச்சி யரசுடனிலவுகாணும்
நத்தியபுரசுகுச்சம் நவின்றிடுமிலந்தைபூமி
வித்தகமழுகிங்கூறும் விளாவுடனிவைகளெல்லாஞ்
சிந்தியாயங்கள்கட்டச் செல்வமுங்குன்றுந்தானே.

இ-ள். அத்தி ஆல் உச்சி அரசு இலவு பரசுக்குச்சம் இலந்தை பீலி மகிழ்விலா இவைகளால் வீடுகட்டினால் இருக்கப்பட்ட செல்வமும் புத்ரபாக்கியமும் குறைந்து வறுமைமேலிட்டு அதிக துன்பத்தை யுண்டாக்கும்-எ-று.

சிறியகாற்றில்வீழ்ந் திரவைசேர்மறமுமல்லாற்
கூறியவாலயத்திற் குணம்பெறவிற்குமல்ல
தேரியமாம்புணரத் திருந்திடுமாமரந்தான்
மாரியேகட்டுமாகில் வம்மிசநாசமாமே.

இ-ள். காற்றிலடிபட்டு வீழ்ந்தமரம் ஆலயத்திலிருக்குமரம் மயானத்திலிருந்தமரம் இவ்வகைப்பட்ட மரங்களால் வீடுகட்டினால் செல்வங்குறைந்து ஆயுள் சிணித்து வம்மிசநாசமாகும்-எ-று.

வெண்பா.

பருத்தியுநத்திப் பனைநாவல்நெல்லி
லருக்குப்புளியில்களோ டெட்டும் - பொருக்கமுடன்
எந்தமனையாயிடினு மிந்திரபதமானாலும்
அந்தமனைபாழாய் விடும்.

இ-ள். பருத்தி அத்திபனை நாவல்நெல்லி எருக்குபுளி இலவு இவ்வகைப்பட்ட மரங்கள் வீட்டிலிருக்குமாகில் தாமரைக்கமலத்தில் வீற்றிருக்கின்ற இலட்சுமியானவள் இவ்விடத்திலிருக்க மனமில்லாமல் வெறுத்து மனையைவிட்டு நீங்குவாள் மனைபாழாகும் என்றவாறு.

நில அளவு.

நிலவாகலங்கள்கொள்ள நேர்படச்சொல்லும்போது
நிலங்கலத்திறைலே மனமுநீட்டிக்கொண்டு
நிலவகலத்திற்முக்கா லரையஅசாலேயாகில்
நிலவகலத்தால்வந்த நிலத்தளவப்புதாமே.

வெண்பா.

ஒத்தநிலவுசல முண்மையுட னுரைக்கில்
அந்தநிலத்தளவென் றெய்திறள் - மற்ற

சாமரமாங்கழுதைசெக்கு குரலதுகவலையாக்கும்
தாளப்பேழ்த்திசையினோசை சங்கொலிமிகவுநன்றே.

இ-ள். கதவைச் சாத்தும்போது கழுதைக்குரல் போலும் செக்கினோசையைப் போலும் சத்தமுண்டாகில் நோக்கவலையுண்டாம் யானைக்குரல் போலும் சங்கினொலிப் போலும் சத்தமுண்டானால் சகலபாக்கியமுண்டாம்-எ-று.

விருத்தம்.

மந்தயாய்வாதபித்த மருவியேநடத்திட்டாலுஞ்
சிந்தையிற்கிளியின்கூச்சல் சிதறியேகிட்டிட்டாலும்
அந்தமாய்நடுச்சட்டத்தி லாணியொன்றாணமாக்கி
சொந்தமாயிருக்குநோய்தான் தீராதுபிணிசொல்லே.

இ-ள். கதவைச் சாற்றும்போது மந்தங்கொண்டு வாதம் பித்தம் யென்னும் இரண்டு நாடிபோல் நடக்கினும் அல்லது கிளியைப்போல் கீச்சென்றும் கூச்சலிடினும் நடுச்சட்டத்தி லாணியொன்றானமென்று சொல்லவும் அதுவீட்டிற் குடையவனுக்கு நோயுண்டாகும்-எ-று.

வெண்பா.

கன்னியரேவாசற் கதவுசிச்சிச்செக்கோசை
மன்னிடிற்புத்திர னுபத்திரமா - முன்னமே
கன்னியரைப்போக்குங் கவலைமிகப்படுத்தும்
அன்னமேசொன்னே னறி.

இ-ள். கதவைச்சாற்றில் சிச்சிச்செக்கோசைபோல் இரைச்சலிட்டு நடக்குமாகில் புத்திர பாக்கியமில்லை மனையாள் மரணமாவாள் மனக்கவலையுண்டாகும்-எ-று.

கரும்பாலையோலேதானுங் கதறியேகத்துமாகில்
வரும்பாலகர்க்குநாச மங்கையரிடத்திற்குற்றம்
பெரும்பாடுமெத்தவுண்டு பெண்பழிதனையேவாங்கும்
அரும்பானகொங்கைமாதே யவத்தையைவிளக்குமென்னே.

இ-ள். கதவைச்சாற்றில் கரும்பாலைபோல் சத்தமிடில் புத்திரநாசமும் பெண்பழியும் அதிக அவஸ்தையுமுண்டாயிருக்கும் என்றவாறு.

வாஸ்துபுருஷன் நிலையறிந்து வாசல்விடும் விதி.

வாஸ்து புருஷனுக்கு பங்குனி சித்திரை வைகாசி இந்த மூன்று மாதமும் மேற்கே தலையாணபடியால் வடக்கேவாசல் விடவும்.

ஆனி ஆடி ஆவணி இந்த மூன்று மாதமும் வடக்கே தலையாணபடியால் கிழக்கே வாசல் விடவும்.

புரட்டாசி ஐப்பசி கார்த்திகை இந்த மூன்று மாதமும் கிழக்கே தலையாணபடியால் தெற்கே வாசல் விடவும்.

மார்கழி தை மாசி இந்த மூன்றுமாதமும் தெற்கே தலை யாணயடியால் மேற்கே வாசல்விடவும்.

வாஸ்துவீட்டின் பலகைமேற்கோள்.

விருத்தம்.

ஐயதோர்வயிற்றில்வாசல் சுகமொடுசெல்வமுண்டாம்
கையது வாசலாகிற் கைக்குழந்தைகளும்பாழாம்
மெய்யதாமார்பேயாகின் வேண்மனையெதிர்ந்துபோகும்
மையவேதலையாமாகிற் பதிக்குமோணிறப்பளென்னே.

மீனமுமாடுமேறு மேற்றிசைதலையதாகி
யூனமற்றிடக்கைகீழா முத்திரதிசையைநோக்கி
தேனைவாசவன்றன்மாகுந் திசைதனிற்காலைநீட்டி
மானெனும்விழியாகேளாய் வாஸ்துதான்கிடக்கும்பாரே.

இ-ள். மீனம் மேஷம் ரிஷபம் இம்மூன்று ராசியில் காலை நீட்டி கன்னி துலாம் விருச்சிகம் இந்த மூன்றுராசியில் சிரசை வைத்து இடக்கைகீழும் வலக்கைமேலுமாக உத்திரதிசையை நோக்கி இந்திரன் திசையில் காலை நீட்டியிருப்பின் வாஸ்துபுரு ஷன்-எ-று.

தண்டொடுகண்டுசிங்கந் தலையதுவடக்கேவைத்து
எண்டிசையிடக்கைகீழாய் வடக்கைதான்மேலதாகத்
திண்டிறலியமன்வாழுந் திசைதனிற்காலைநீட்டி
வண்டினிகுழலினுளே வாஸ்துவுங்கிடக்கும்வாறே.

இ-ள். மிதுனம் கடகம் சிங்கம் இம்மூன்று ராசியிற் காலை நீட்டி தனுசு மகரம் கும்பம் இம்மூன்று ராசியிற் காலைவைத்து இடக்கைகீழும் வடக்கைமேலுமாக யெமன்மூலையில் காலை நீட்டி வாஸ்து புருஷன் கிடப்பான்-எ-று.

கன்னியுந்துலாமுந்தேளுங் கதிர்முடிதிசையில்வைத்து
மன்னியவருணண்மேய மகிழ்வொடுகாலைநீட்டி
இன்னிசையிடைக்கைகீழா யியமன்றன்றிசையைநோக்கி
வண்ணமாமாதேகேளாய் வாஸ்துதான்கிடக்கும்வாறே.

இ-ள். கன்னி துலாம் விருச்சிகம் இந்தமூன்று ராசியிற் காலை நீட்டி மீனம் மேஷம் ரிஷபம் இம்மூன்று ராசியில் சிரசை வைத்து இடக்கைகீழும் வலக்கைமேலுமாக எமன்றிசையைநோக்கி வாஸ்து புருஷன் கிடப்பான்-எ-று.

தனுவொடுமகரக்கும்பந் தலையதுதெற்கேவைத்து
மனுவொடுவிடக்கைகீழாய் வலக்கைதான்மேலதாக
மனமொடுமுகமேற்கு வடக்கினிற்காலைநீட்டி
வனமுளமாதேகேளாய் வாஸ்துவுங்கிடக்கும்வாறே.

மிரகசிரத்திற்கும் திருவாதிரைக்கும் தென்சார்பு நீளமும் 9-க்கு அகலமும் 3-க்கு வாசல் வடக்கு நிலைகா லுயரம்-49.

புனர்பூசத்திற்கு மேல்சார்புநீளமும் 10-க்கு அகலமும் 3-முக்கா லுக்கு கிழக்கு நிலைகா லுயரம்-55.

பூசத்திற்கும் ஆயிலியத்திற்கும் மேல்சார்புநீளமும் 9-க்கு அங்குலமுழம் 3-க்கு வாசல்கிழக்கு நிலைகா லுயரம்-56.

மகத்துக்கு வடசார்புநீளமும் 5-முக்கா லுக்கு அகலமும் 3-க்கு வாசல் மேற்கு நிலைகா லுயரம்-49.

பூரத்திற்கு வடசார்பு நீளமுழமும் 10-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் தெற்கு நிலைகா லுயரம்-49.

உத்தரத்திற்கு மேல்சார்பு நீளமுழம் 9-க்கு அகலமும் 3-க்கு வாசல் கிழக்கு தெற்குமாக நிலைகா லுயரம்-57.

அஸ்தத்திற்கு வடசார்பு நீளமுழம் 13-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் தெற்கு நிலைகா லுயரம்-57.

சித்திரைக்கு வடசார்பு நீளமுழம் 11-க்கு அகலமுழம் இரண்டேமுக்கா லுக்கு வாசல் தெற்கு நிலைகா லுயரம்-57.

சோதிக்கு வடசார்பு நீளமுழம் 5-க்கு அகலமுழம் 2-க்கு வாசல் தெற்கு நிலைகா லுயரம்-40.

விசாகத்திற்கு வடசார்புநீளமுழம் 9-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் தெற்கு நிலைகா லுயரம்-49.

அனுஷத்திற்கு கீழ்சார்பு நீளமுழம் 5-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் மேற்கு நிலைகா லுயரம்-49.

கேட்டைக்கு கீழ்சார்பு நீளமுழம் 5-க்கு அகலமுழம் 3-முக்கா லுக்கு நிலைகா லுயரம்-49.

மூலத்திற்கு வடசார்பு நீளமுழம் 7-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் தெற்கு நிலைகா லுயரம்-27.

பூராடத்திற்கு கீழ்சார்பு நீளமுழம் ஆறேமுக்கா லுக்கு அகலமுழம் 3-க்கு வாசல் மேற்கு நிலைகா லுயரம்-53.

உத்திராடத்திற்கு கீழ்சார்பு நீளமுழம் 13-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் தெற்கு நிலைகா லுயரம்-57.

திருவோணத்திற்கு வடசார்புநீளமுழம் 11-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் தெற்கு நிலைகா லுயரம்-53.

அவிட்டத்திற்கு கீழ்சார்பு நீளமுழம் 7-க்கு அகலமுழம் 3-க்கு வாசல்மேற்கு நிலைகா லுயரம்-51.

சதயத்திற்கு தென்சார்புநீளமுழம் 9-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் வடக்கு நிலைகா லுயரம்-49.

பூரட்டாதிக்கு தென்சார்பு நீளமுழம் 15-க்கு அகலமுழம் 4-க்கு வாசல் வடக்கு நிலைகா லுயரம்-56.

உத்திரட்டாதிக்கு கீழ்சார்பு நீளமுழம் 10-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் மேற்கு நிலைகாலுயரம்-57.

இரேவதிக்கு தென்சார்பு நீளமுழம் 10-க்கு அகலமுழம் 3-க்கு வாசல் வடக்கு நிலைகாலுயரம்-51.

மனைகள் அகலம் நீளத்துக்கு வீட்டுக்குள் அறைகள் கூடங்கள் சற்காருகள் வாசல்கள் முதலானவைகள் வைப்பதற்கு இலட்சணம்.

மனைதனையளந்துவைத்து மகிழ்ச்சியாய்வாழ்வோர்க்கெல்லா
வினையில்லாச்சாத்திரத்தை விளம்புவேன்சொல்லக்கேளும்
பனைநரிகுடிப்பால்போலப் பாரினில்மயங்கவேண்டாம்
முனைமணிபூண்டதந்தி முகவனுங்காப்பதாமே.

ஆரியமறைகடன்னி லனைவருக்குமுதவியாகப்
பார்புகழ்முகுந்தன்மைந்தன் பங்கயன்வகுத்தநூலும்
காரணியுமையோர்பாகன் சதாசிவன்சொன்னநூலுஞ்
சீர்பெறவாய்ந்துபார்த்துச் செழித்திடமனைசொல்வாயே.

ஏழடிமுதலாகி லெண்ணியதருமந்தீதாம்
வாழ்வுடன்மக்களோய்தான் வந்தவர்தன்னைக்கொல்லுந்
தாழ்விலாவிவரமாகச் சரஸ்வதிசொன்னநூலால்
ஊழ்வினையிருக்க உற்றதோர்மேதம்பாரீர்.

எட்டியால்நீள வெண்ணியகருமநன்று
அட்டலும்வருவதில்லை தாரத்தேயகன்றுநிற்பான்
பட்டிடமாந்தளிக்கு பாக்கியமெத்தவுண்டாம்
வட்டமாங்குழலிநூளே மயேசுரன்சொன்னார்பாரே.

ஒன்பதுஅகலநீள மோக்கிடி லுயிரும்போகும்
அன்பதுவயதாகு மாயினுந்தனக்குச்சாவாம்
சம்புவேபார்த்துச்சொன்னார் சலிப்புகளமெத்தவுண்டாம்
வம்பதுசெய்யவேண்டா மறையவர்நூலைப்பாரீர்.

பத்துமேயகலநீளம் பரிவுடன்வைத்தவர்க்கும்
கொத்துடனொடுமாடு குறைவிலாவாழ்வுண்டாகும்
மெத்தவுநன்மையுண்டாம் வேளாண்மைமிகுதியாகும்
சுத்தனாரிதுகளெல்லாங் கருதியேசொன்னார்பாரீர்.

பத்துமேயொன்றுமாகில் பரிவுடன்சொல்லக்கேளீர்
சித்தமுங்கலக்கவேண்டாந் தீவினையொன்றுமில்லை
மெத்தவேபாலுஞ்சோறும் வேளாண்மைமிகுதியாகும்
அத்தனாருளிச்செய்தா ராய்ந்துநூலைப்பாரே.

பத்துமேயிரண்டுமாகில் பரிவுடன்சொல்லக்கேளு
தத்துமேசெல்வமெல்லாந் தரணியிலிருப்பதில்லை

இருபதுமிரண்டுமாகி லெதிரியுமஞ்சுவன்காண்
வருவதுமகிழ்ச்சியாக வாழ்வுமேமெத்தவுண்டாம்
வெருவதுவானும்பெண்ணும் பிரபலமாகவிற்கும்
ஒருமையாயிந்தநூலை யுமையவள்தனக்குரைத்தார். 143

இருபதுமூன்றேயாகி லெங்கணோய்தானுமுண்டு
வருவதுகலங்கிநிற்கும் வாழ்வுமேயற்பமாகும்
இருவினைமிகவுமுண்டு இருப்பவர்கெடுதியாகும்
மருவுள்ளதேசம்போகு மாரியும்பெய்யாதென்னே. 144

அருநான்காமடியதாகி லற்பமாய்வயதுகுன்றும்
ஒருநான்குளிருபத்தோன்றி லுமையவள்கடாட்சம்போகும்
இருநான்குமெட்டுமெத்து மிந்திரன்செல்வம்பெற்று
ஒருமையாய்வாழ்வரென்று வுமையவள்தனக்குச்சொன்னார். 145

ஏழுடனிருபதாகி லெழும்புமேயோகம்பாரு
தாழ்விலாவாழ்வுபெற்றுத் தரணியில்மதிக்கவாழ்வா
பாழ்போனபயிர்கடானும் பலிதமாய்விளையும்பாரு
ஊழ்வினையொன்றுமில்லை யுமைபாகன்சொன்னார்பாரீர். 146

எட்டுடனிருபதாகி லெதிரியுமஞ்சிநிற்பான்
கொட்டுமேமனையில்வாழ்வு குறைவிலாபாக்கியத்தை
கெட்டுமேபோகாதப்பா கேசரியுதவியாலே
தட்டுதான்வாராதென்று தாண்டவமூர்த்திசொன்னார். 147

இருபதுமொன்பதானா லெழும்புமேசெல்வமப்போ
ஒருபதுமிருபதாகி லுண்மையாய்ச்சொன்னேன்பாரும்
வருவதுவனேகயோகம் வந்தவர்களிப்பில்லாமல்
பெருவதுவானும்பெண்ணும் பித்தனார்தாமுரைத்தார். 148

மூப்பதுமொன்றுமானால் முக்கணரருளுமுண்டாம்
மூப்பதுமிரண்டுமாகில் முகுந்தனார்கடாட்சத்தாலே
மைப்பதுவடுமைமக்கள் வையகமுழுதும்வாழ்வார்
தப்பினைசொன்னேனந்த சங்கரருமைக்குச்சொன்னார். 149

ஐயாறுமூன்றுமானா லானதோர்குடியுநன்றும்
ஐயாறுநான்குமாகி லண்டியகுடிவிட்டோட்டும்
ஐயாறுமைந்துமானா லட்டலட்சுமியுஞ்சேர்வள்
ஐயாறுமாறுமாகி லரசரோடரசாள்வாரே. 150

ஏழஞ்சுமிரண்டுமாகி லின்பமாலாபமுண்டு
ஏழஞ்சுமூன்றுமாகி லெப்போதும்பசாசுசேரும்
ஏழஞ்சுநாலுமாகி லின்பமுஞ்சுகமுண்டாகும்
ஏழஞ்சுமஞ்சுமாகி லென்றைக்குஞ்சலிப்புண்டாமே. 151

எண்ணைந்துமொன்றேயாகி லின்பமாகுமோசெல்வம்
கண்ணவேயேழாறாகி லட்சுமிகுடியிருப்பாள்

திண்ணமாயேழைந்தெட்டும் சிறப்பில்லைதீங்குண்டாகும்
கண்ணவேயாறுநெட்டுங் கண்டெட்டும்போவார்தாமே. 152

வீட்டுக்கு அறைகள் கூடங்கள் வாசல் முதலானவை.

6 அடி. நன்மையுண்டு
7 அடி தரித்திரம்
8 அடி இராச்சியம்
9 அடி பீடை
10 அடி பாலுசாதமுண்டு
11 அடி நன்னல்
12 அடி புத்திர ஆனி
13 அடி வியாதியுண்டு
14 அடி சஞ்சலமுண்டு
15 அடி உடனே துன்பம்
16 அடி மிகுந்தசெல்வமுண்டு
17 அடி எதிரியஞ்சிநிற்பான்
18 அடி அமர்ந்தமனைபாழா
19 அடி தரித்திரம் புத்திரவியா
20 அடி இன்பந்தரும்
21 அடி நன்மைதரும்
22 அடி எதிரியஞ்சுவான்
23 அடி தீதுண்டாம்
24 அடி அடிமத்திபம்
25 அடி மனையாள்மரணம்
26 அடி சம்பத்துண்டாம்
27 அடி மிகுந்தசெல்வமுண்டு
28 அடி தெய்வகடாட்சமுண்டு
29 அடி பால்பாக்ய செல்வமுண்
30 அடி இலட்சுமி கடாட்சம்பெற்று வாழ்வார்
31 அடி துன்பமில்லைநன்மையுண்
32 அடி முன்னிழந்த பொருள்வரும்
33 அடி நன்மையுண்டாம்
34 அடி குடிவிட்டோட்டும்
35 அடி லட்சுமி கடாட்சமுண்டு
36 அடி வீரலட்சுமிகடாட்சமுண்டாம்
37 அடி கன்றுகாலிமுதலானவைகளுண்டாம்
38 அடி பிரமராட்சதன்குடியிருப்பான்
39 அடி மிகுந்தநன்மையுண்டாம்
40 அடி எதிரிகளால்என்னேரமுங்கீழ
41 அடி குடும்ப சம்பத்துண்டா
42 அடி அஷ்டலட்சுமி குடியிருப்பாள்
43 அடி நன்மைகொடாது
44 அடி கண்யோம்

வைத்துக் கட்டுவதற்கு அடியளவு அகலநீளம்.

---

துறவுகளெடுக்க அகலநீளம் சுற்றுமுழமறியவும்.

4-அடி துறவுக்கு நீளம் அடி 15-அடி துறவுக்கு நீளம் அடி-15 9-அடி துறவுக்கு நீளம் அடி-18 7-அடி துறவுக்கு நீளம் அடி-21 8.அடிக்கு நீளம் அடி 24.

கிணறுவெட்ட கரைகட்ட.

---

ஐப்பசிமீ நடுப்பத்திலே உத்திரமூன்றும் கேட்டை ரேவதி சித்திரை ரோகணி திருவோணம் அஸ்தம் மிருகசீரம் பூராடம் பஞ்சமி சத்தமி திரிதியை ஏகாதசி திரியோதசி பிரதமை கும்பம் மீனம் மகரம் ரிஷபம் கர்க்கடகம் சுபர்வாரங்களும் உத்தமம் சித்திரை நடுப்பத்தில் முன்சொன்னபடியே கூடிய சுபதினத்தில் கரை கட்ட உத்தமம்.

## நட்சத்திரம் மிருகம் பட்சி மரம் கணம்.

| | |
|---|---|
| அசுவினி குதிரை இராஜாளி எட்டி | தேவகணம் |
| பரணி யானைகாக்கை நெல்லி | மனுகணம் |
| கார்த்திகை ஆடுமயில் அத்தி | இராட்சதகணம் |
| உரோகணி பாம்பு ஆந்தை நாவல் | மனு |
| மிருகசிரம் சார கோழிகருங்காலி | தேவ |
| திருவாதிரை நாய் அன்றில் செங்கருங்காலி | மனு |
| புனர்பூசம் பெண்பூனை அன்னம்மூங்கில் | தேவ |
| பூசம் கடா நீர்க்காக்கை அரசு | தேவ |
| ஆயிலியம் ஆண்பூனை கிச்சிலிபுன்னை | இரா |
| மகம் ஆணெலி ஆணழுகு ஆல் | இரா |
| பூரம் பெருச்சாளி பெண்கழுகு பலாசு | மனு |
| உத்திரம் எருது சிவளவண்டு அலரி | தேவ |
| அஸ்தம் எருமைபருந்து ஆத்தி | தேவ |
| சித்திரை ஆண்புலி மரங்கொத்திவில்வம் | இரா |
| சோதி காக ஈமருது | தேவ |
| விசாகம் பெண்புலி செவ்வாற்குருவிளா | இரா |
| அனுஷம் பெண்மான் வானம்பாடி மகிழ் | தேவ |
| கேட்டைகலை சக்கரவாகம் பிராய் | இரா |
| மூலம்பெண்ணாய் செம்போத்து மாரா | இரா |
| பூராடம் ஆண்குரங்கு கவுதாரிவஞ்சி | மனுஷ |
| உத்திராடம் மலட்டுப்பசு வலியன்பலா | மனுஷ |
| திருவோணம் பெண்குரங்கு நாரைஎருக்கு | தேவ |
| அவிட்டம் காமதேனு வண்டுவன்னி | இரா |
| சதயம்பெண்குதிரை அண்டங்காக்கை கடம்பு | மனு |
| பூரட்டாதி பருஷாமிருகம் உள்ளான்தமா | மனு |
| உத்திரட்டாதி பாற்பசுகேட்டான் வேம்பு | மனு |
| ரேவதிபெண்யானை வல்லூறு இலுப்பை | தேவ |

## நாமநட்சத்திர எழுத்துகள்.

| | | | | |
|---|---|---|---|---|
| சு | சே | சோ | லா | அச்சுவணி |
| லி | லு | லே | லோ | பரணி |
| ஆ | ஈ | ஊ | ஏ | கார்த்திகை |
| ஓ | வா | வீ | வு | ரோகணி |
| வே | வோ | கா | கி | மிருகசிரம் |
| கூ | கச | ஙு | ச | திருவாதிரை |
| கெ | கோ | ஹ | ஹி | புநர்பூசம் |
| ஹு | ஹே | ஹோ | ட | பூசம் |
| டி | டு | டே | டோ | ஆயிலியம் |
| மா | மீ | மூ | மே | மகம் |
| மோ | டா | டி | டு | பூரம் |
| டே | டோ | பா | பி | உத்திரம் |

| | | | | |
|---|---|---|---|---|
| பூ | ஷ | ண | ட்டா | அஸ்தம் |
| பே | போ | ரா | ரி | சித்திரை |
| ரு | ரே | ரோ | த | சோதி |
| தி | து | தே | தோ | விசாகம் |
| நா | நீ | நு | நே | அநுஷம் |
| நோ | யா | இ | யூ | கேட்டை |
| எ | யோ | ப்பா | ப்பி | மூலம் |
| பூ | தா | ப | ட | பூராடம் |
| பே | போ | ஜா | ஜி | உத்திராடம் |
| ஜு | ஜே | ஜோக | க | திருவோணம் |
| க | கீ | கு | கே | அவிட்டம் |
| கோ | ச | ஸி | ஸு | சதயம் |
| ஸே | ஸோ | தா | தி | பூரட்டாதி |
| து | ஸ | த்தா | த்தி | உத்திரட்டாதி |
| தே | தோ | ச்சா | ச்சி | ரேவதி |

அருக்கனிலை.

சனிக்கிழமை ராத்திரி 30-நாழிகையும் ஞாயிற்றுக்கிழமை பகல் 30-நாழிகையும் தெற்கிலும், ஞாயிற்றுக்கிழமை ராத்திரி 30 திங்கட்கிழமை 60 தென்மேற்கிலும், செவ்வாய்க்கிழமை பகல் 30-ம் வடமேற்கிலும் புதன்கிழமை இராத்திரி 30-ம் வியாழக்கிழமை 60-ம் வடகிழக்கிலும் சனிக்கிழமை பகல் 30-ம் கிழக்கிலும் அருக்கனிருக்கும் அக்கினிமூலை பாழாம்.

திசையோனிநிலை.

| | | | |
|---|---|---|---|
| கருடன் | கிழக்கு | பூனை | தென்கிழக்கு |
| சிங்கம் | தெற்கு | நாய் | தென்மேற்கு |
| பாம்பு | மேற்கு | எலி | வடமேற்கு |
| யானை | வடக்கு | முசல் | வடகிழக்கு |

அருக்கினில் கருடனைவைத்து முறையே பார்க்கும்போது எதிர்த்தெதிர் பகையோனியிற்கும் அவைகளுள் கருடன்திசையிலிருந்து பாம்புத்திசைக்குப் போகலாம் பாம்புதிசையிலிருந்து கருடன் திசைக்குப் போகலாகாது ஏனெனில், கருடன் இரையெடுக்கப்போகும் பாம்பு இரையாகவரும் ஆகலாலெங்க ஒருவன் யாத்திரைக்கு பட்சிமுதலிய சகுனங்கள் பார்க்கும்போது இரையாகும் யோனித்திசையிலிருந்து இரையெடுக்கும் யோனித்திசைக்கு அவைபோகலாக.

கவி.

அருக்கனிலையிற் கருடனைத்தொருபூனை
நெருக்கியச்சிங்கமொடு கின்புலி நுநேர்நாய்

தருக்குமுடனுகமெலி யானைமுதலெட்டும்
இருக்குமுதலிந்திரனே ராமபகையெதிர்த்தே.

## இராசி விசேஷம்.

| | |
|---|---|
| விவாகத்துக்கு-மேஷம் | நிதிகொடுக்க-ரிஷபம் |
| யாத்திரைக்கு-மிதுனம் | மரம்வைக்க-கர்க்கடகம் |
| குருவைக்காண-சிங்கம் | புணர்ச்சிக்கு-கன்னி |
| வீடுகட்ட-துலாம் | உழவுக்கு-விரிச்சிகம் |
| கிணறுவெட்ட-தனுசு | கப்பல்யாத்திரைக்கும்-ரம் |

## மட சுத்தம்.

குடிபுக 21-ம் முடிசூட்ட 19-ம்
அன்னப்பிராசனத்துக்கு 10-ம் மயிர்கழிக்க 5-ம்
உபநயனத்துக்கு 8-ம் விவாகத்துக்கு 7-ம்
கோடியுடுக்க 6-ம் யாத்திரைக்கு 5-ம
வித்தியாரம்பத்துக்கு 4-ம பொன்பூண 2-ம்

நிஷேகத்துக்கு லக்கினம் சுத்தமாக இருக்கவேண்டும்.

ஞாயிறு உத்தியோகஞ்செய்ய, திங்கள் விதைவிரைக்க, செவ்வாய் போர்செய்ய, புதன் வித்தியாரம்பஞ்செய்ய, வியாழம் விவாகஞ்செய்ய, வெள்ளி மயிர்கழிக்க, சனி தவஞ்செய்ய உத்தமம்.

## விஷ்டி தோஷம்.

பூர்வபட்ச சதுர்த்தியில் 5-ம் சாமம்மேற்கிலேயும் அஷ்டமியில 2-ம் சாமம்தென்கிழக்கிலேயும் ஏகாதசியில் 7-ம் சாமம் வடக்கிலேயும் அமரபக்ஷத்திரிகையில் 6-ம் சாமம்வடமேற்கிலேயும் சத்தமியில் 3-ம் சாமம்தெற்கிலேயும் தசமியில் 8 ம் சாமம்வடகிழக்கிலேயுஞ் சதுர்த்தசியில் முதற்சாமம் கிழக்கிலேயும் விஷ்டி பண்ணுதலால் இச்சாமங்களில் சுபகாரியங்களு மித்திசையில் யாத்திரையுஞ் செய்யலாகா.

## ௸ வி.

மன்னுமுதற்சதுர்த்தியினி லைந்தாஞ்சாமம்
மருவிவட்டமியிரண்டு பன்னொன்றேழாம்
முன்னிதுவாநாற்சாமம் பிற்பக்கத்தின்
மூன்றினிலிருமூன்றேழின் மூன்றுஞ்சாமம்
பன்னியபிற்பத்தினிலே யெட்டாஞ்சாமம்
பதினான்கின் முதற்சாமம் பகர்ந்தவிஷ்டி
இன்னதனையச்சாம பெற்றுமற்றை
யிராவி முதற்றிசைகட தென்றுமாமே.

சூரியனின்ற நட்சத்திரத்திற்கும் 7-ம் நட்சத்திரம் உற்பாதமென்றும் 10-ம் நட்சத்திரம் தாரகமென்றும் 15-ம் நட்சத்திரம் பிரமதண்டமென்றும் 21-ம் நட்சத்திரம் காலனென்றும்பேராம்.

செவ்வாய்நின்ற நட்சத்திரத்துக்கு 7-ம் நட்சத்திரஞ் சூலமென்றும் 10-ம் நட்சத்திரஞ் சக்கரமென்றும் 15-ம் நட்சத்திரம் கண்டமென்றும் 21-ம் நட்சத்திரங் காலனென்றுபேராம்.

புதன்நின்ற நட்சத்திரத்திற்கு 8-ம் நட்சத்திரமும் 18-ம நட்சத்திரமும் 24-ம் நட்சத்திரமுங் கண்டமென்றும்பேராம்.

சுக்கிரனின்ற நட்சத்திரத்திற்கு 7-ம் நட்சத்திரமும் 9-ம் நட்சத்திரமும் வியாழநின்ற நட்சத்திரத்துக்கு 7-ம் நட்சத்திரமும் 9-ம் நட்சத்திரமுங் கொடுமையென்றுபேராம்.

சனிநின்ற நட்சத்திரத்துக்கு 5-ம் நட்சத்திரமும் 9-ம் நட்சத்திரமும் 10-ம் நட்சத்திரமும் 11-ம் நட்சத்திரமும் 20-ம் நட்சத்திரமும் பந்தமென்றுபேராம்.

இராகுகேதுநின்ற நட்சத்திரங்களுக்கு 7-ம் நட்சத்திரம் பரிகமென்றுபேராம் இவை சுபகாரியங்களுக்கு ஆகாவாம்.

மாதங்களில் கரிநாள்வருந் தேதிகள்.

| | |
|---|---|
| சித்திரை 6-15 | கார்த்திகைமுதற்சோமவாரமும் 1-10-17 |
| வைகாசி 7-16-17 | மார்கழி 6-9-11 |
| ஆனி 1-6 | தை 1-2-3-11-17 |
| ஆடி 2-10-20 | மாசி 15-16-17 |
| ஆவணி 2-9-28 | பங்குனி 6-15-19 |
| புரட்டாசி 16-29 | |
| ஐப்பசி 6-20 | |

கவி.

இன்பமுறுமேடபதினாறு பதினைந்தாம்
ஏறதனலாறுபதிறைறு பதினேழாம்
அன்பிலகுமானியென மாடலவன்ரண்டோ
டைபிரண்டுமையநான்கு மாவணியிரண்டும்
ஒன்பதெழுநான்குதன்னி லுற்றபதினொ
டொன்றொழுப்பான் றுனேயிலோசாறுதோளில்
முன்சோமவாரமொன்று பத்துபதினொன்றுமுதலாநாள்
மூளியாறுமொன்பதும் பன்னொன்றுமுதலாநாள்
பாதவாதநாள்தலையி லொன்றிரண்டுமூன்று
மொருபது னென்றுபதினேழுதவுமாதா
துதிபெருகுமாசிபதினைந்து பதினாறுஞ்
சொல்லுபதினேழுகண்ட மாகமதிலாறும்
பதினைந்துமொன்றொழியை நான்குமிகுதீதாம்
புகர்ந்தமாதந்தோறுஞ் செய்தியெனக்கொண்டு

கதிதருநற்பொதியவரை மூனிவனுரைத்திட்ட
கரிநாண்மூப்பநான்குங் கண்டறிகுவீரே.

ஞாயிறுக்கு 60-நாழிகைக்குமேலும் திங்கள் புதனுக்கு 42க்கு மேலும் செவ்வாய்க்கும் வியாழத்துக்கும் 33-க்குமேலும் வெள்ளிக்கும் 21-க்குமேலும் சனிக்கு 14-க்குமேலும் மூனேமுக்கால் நாழிகை தியாச்சியமாம்.

கவி.

ஞாயிறுநாளெட்டா நற்றிங்களீராறும்
தீயசேய்பொன்மூப்பத் தொன்றுகும்-ஏயபுதன்
நாற்பதிரண்டாகு நள்ளவெள்ளிமூவேழாம்
காற்கனியீரேழுவிஷம் காண்.

நட்சத்திர தியாச்சியஞ விதமாவன்.

| | | | |
|---|---|---|---|
| அஸ்வனி | 50 | சோதி | 14 |
| பரணி | 24 | விசாகம் | 14 |
| கார்த்திகை | 30 | அனுஷம் | 10 |
| உரோகணி | 20 | கேட்டை | 14 |
| மிருகசிரம் | 14 | மூலம் | 29-56 |
| திருவாதிரை 11 | 11 | பூராடம் | 24 |
| புநர்பூசம் | 30 | உத்திராடம் | 24 |
| பூசம் | 30 | திருவோணம் | 10 |
| ஆயிலியம் | 32 | அவிட்டம் | 10 |
| மகம் | 30 | சதயம் | 16 |
| பூரம் | 22 | பூரட்டாதி | 18 |
| உத்திரம் | 18 | உத்திரட்டாதி | 24 |
| அஸ்தம் | 22 | ரேவதி | 20 |
| சித்திரை | 12 | | |

இந்நாழிகைக்குமேல் 4-நாழிகைதியாச்சியம்.

லக்கினத்தியாச்சியம்.

மேஷம் ரிஷபம் கன்னி தனுசு ஆக 4-ம் முதலில் அரைநாழிகையும், மிதுனம் சிங்கம் துலாம் கும்பம் ஆக 4-க்கும் நடுவில் அரை நாழிகையும்,

கர்க்கடகம் விரிசிகம் மகரம் மீனம் ஆக 4-க்கும் கடையில் அரை நாழிகையுமாம்.

சரராசியாவன.

மேஷம் கர்க்கடகம் துலாம் மகரம் ஆக-4

ஸ்திரராசி.

ரிஷபம் சிங்கம் விரிச்சிகம் கும்பம் ஆக-4

உபாராசி.

~~மேஷம்~~ மிதுனம் ~~சிம்மம் துலாம்~~ தனுசு கும்பம் ஆக 6

இராகுகாலக்கவி.

அரிதிருப்பத்தாறேகா லம்புவிமூன்றேமுக்கால்
எரிவண்ணனிருப்போ டிரண்டரைபுதன்வைந்து
குருபதினெட்டேமுக்கால்குளிவெள்ளிப்பதினைன்றேமுக்கா
காரியனேழரையிராகுகாலமென்றறிந்துக்கொள்ளே.

வாரகுளிகன்.

| பகல் | | இரா. | |
|---|---|---|---|
| ஞாயிறு | 92¼ | ஞாயிறு | 11¼ |
| திங்கள் | 22½ | திங்கள் | 7½ |
| செவ்வாய் | 18¾ | செவ்வாய் | 3¾ |
| புதன் | 15 | புதன் | 26¼ |
| வியாழம் | 11¼ | வியாழம் | 22½ |
| வெள்ளி | 7½ | வெள்ளி | 18¾ |
| சனி | 3¾ | சனி | 15 |

ஞாயிறுமுகூர்த்தமேழா னன்மதிக்காறுஞ்செவ்வாய்த்
தூயநற்புகர்க்கிரண்டாஞ் சன்னினுக்கென்றதாகும்
ஆவியமுகூர்த்தத்தோடே யற்றிடும் குளிகமெல்லில்

இராக்குளிகன்.

கதிரவன்றனக்குமூன்றுங் கவின்மதிக்கென்றதாகும்
சதிபெறுசெவ்வாக்கொன்று சாற்றியபுதற்கேழாகும்
மதிவளர்பொன்னுக்காறன் மண்புகர்கனகந்தாநான்கு
கதிர்மகர்காமுகூர்த்தங் காண்டியபுகல்போற்கொள்ளே.

கிரகபார்வை.

குரு-57-9-ஐயும் சனி-37-ஐயும்
செவ்வாய்-4-7-ஐயும் குளிகன்-70-ஐயும்
மற்றக்கிரகங்கள்-7-ஐயும் பார்ப்பார்.

பார்வையினளவு.

1-7-முழுப்பார்வை-8-9-முக்காற்பார்வை
5-அரைப்பார்வை-4-10-காற்பார்வை
3-11-அரைக்காற்பார்வை

சேருமுதன்மேழுதிங்கள் மூழுநோக்கென்பானெட்டுமனை
பாருந்தேவரைநோக்கம் பத்துநான்குங்கானேக்கம்
ஆறுமூன்றும்பன்னொன்று மனைக்கானேக்கா வுடனே
நாரியிரண்டும்பன்னிரண்டு நாட்டமில்லைவே...ட்கே.

கிரகப்பிரவேசம்.

ஆனி ஆடி புரட்டாசி மார்கழி மாசி பங்குனி மாதங்களும் ஞாயிறு செவ்வாய் வியாழம் அசுவினி மிருகசீரிடம் புனர்பூசம் அஸ்தம் சித்திரை சோதி மூன்றுத்திரங்கள் அனுஷம் திருவோணம் தவிர மற்ற நட்சத்திரங்களும் விருச்சிகம் கும்பம் இருந்தையும் ஆகலாம் அஷ்டம் சுத்தமுள்ள லக்கின முகூர்த்தமம்.

இராவிழிப்பு ராசியாவண.

மேஷம் ரிஷபம் மிதுனம் கர்க்கடகம் தனுசு மகரம் ஆக-6.

பூமிசல்லியவேறு.

களத்திரந்தானந்தன்னிற் கனியொடுமூமியெலும்பும்
வலத்துடன்மனையினின்றால் மனையவள்மரணமாவாள்
விளைக்கிடுந்துன்பமெல்லாம் வியாதியாஞ்சங்கபீடை
கிளைத்திடுங்குலங்கள்யாவும் கெடுதியாய்மயன்சொன்னரே.

இ-ள். உதயவாரூடமாகி ஏழாமிடத்தில் கிரகங்கள் நிற்குமாகில் அதற்கு ஒன்று நான்கு ஏழுகுலத்தில் சந்திரனின்றால் சல்லிய மிருக்கிறதென்று நிச்சயமாய்ச் சொல்லப்படும் அதன்பலன் ஸ்திரீகளைக் கொல்லும் குலத்துக்குக் கெடுதிவரும் பொருட்சேதமும் உயிர்சேதமுண்டாகும் அம்மனையில் சௌக்கியமில்லை-எ-று.

சாம்பலோடெலும்புகூடித் தழைத்திடுமனையினின்றால்
சோம்பலேமிகவுண்டாகும் சுகமதற்கில்லைகண்டாய்
பாம்பினாலச்சமுண்டாம் பாரியால்விரோதமுண்டு
நாம்பலநூல்கள்பார்த்து ஞாயமாய்வகுத்தவாரே.

இ-ள். உதயவாரூடங்களில் கிரகங்கள் நிற்கில் அதற்குக் கேந்திரங்களில் சந்திரனின்றால் அந்தமனையில் சாம்பலுள்...ள்ளும்பும் இருக்குமென்றறியவேண்டும் இதற்குப்பலன் சோம்பலும் பாம்பினால் அச்சமும் உண்டு பாரியால் விரோதம் சம்பவித்து நசிக்கும் சங்கை பீடையென்று சொல்லவேண்டும்-எ-று.

புத்திரத்தானந்தன்னிற் பொருந்தியசல்லியங்கள்
தத்துவமானகல்லு தரித்திடும்தங்கள்சட்டை
பெற்றிடவெலும்புகூடிற் பெரியவம்மனையினின்றால்
அற்றிடுங்குலங்களென்று ஐயனுமயன்சொன்னரே.

இ-ள். உதயவாரூடத்திற்கு ஐந்தாமிடத்தில் கிரகங்கள்நின்று அதற்கு கேந்திரங்களில் சந்திரனின்றால் கருங்க...லும் மரமும்

கட்டையும் எலும்பும் இருக்கிறதென்று சொல்லவேண்டும் அதற்குப்பலன் குலமல்லாத புருஷர்களை அடக்கும்-எ-று.

உயிர்கற்கிகண்டத்தி லுற்றதோர்சல்லியங்கள்
மயிர்மூளைகூடிநின்றால் மன்னவர்தமக்குமாகா
தயிரியம்பலன்சம்பத்து தானதுமழியுமென்றே
குயின்மொழியுடையமாதே குறிப்புடன்சொல்லினரே.

இ-ள். உயிரென்பது ஆருடலக்கினம் சந்திரலக்கினம்இதற்கு இரண்டாமிடத்தில் சந்திரனின்றால் அது சல்லியமென்றறிவது அதற்குப்பலன் அந்த வீட்டெஜமானுக்காகாது தைரியம் பெலன் சம்பத்து இவைகளெல்லாமழியும்-எ-று.

கருங்கல்லோடெலும்புகூடிக் காரியத்தானந்தன்னில்
இரும்பொடுகுறுவுங்கட்டை ஈயம்பித்தளைதான்சேர்ந்தால்
அரும்பொருளுசமாகு மம்மனையழியுமென்றே
தருந்திருப்புவனமாதே சாஸ்திரமயன்சொன்னரே.

இ-ள். காரியத்தானத்திற்குபத்தாமிடத்தில்கிரகங்களின்றால் கருங்கல் எலும்பு தாரா ஈயம்பித்தளை இவைகளிலொன்றிருக்கும் அதற்குப்பலன் பொருளழிந்து மனிதர் சேதமாகி அர்த்தமனை எடு பட்டுப்போம் பயங்கரமான சொற்பனமுண்டாம்-எ-று.

ஆரெட்டுப்பன்னிரெண்டி லானதோர்சல்லியங்கள்
கூறிட்டுநின்றதானால் குற்றமேயில்லைகண்மை
வீறிட்டலாபமேழு வித்தைசேர்மூன்றினின்றாற்
பேறிட்டசல்லியங்கள் பெரும்பிணிமிகவுண்டாமே.

இ-ள். ஆறுமிடம் எட்டாமிடம் பன்னிரண்டாமிடம் இவைகளில் கிரகங்களின்றால் சல்லியமுண்டு பெரும்பிணியாகிய கண்ம வியாதியுண்டாகும்-எ-று.

சாடியோடெலும்புகூடித் தரைத்திடுமனையில்நின்றால்
ஓடியகப்பலாழி யுடைந்ததுபோலேயோகங்
கூடியேமனையினின்றாற் குலந்தனைநாசஞ்செய்யும்
பாடியேமயனூர்சொன்னார் பயனறிந்துரைக்கவாமே.

இ-ள். சாடியோடு எலும்பாயிருக்கிறதென்று உதயலக்கினத்தில் கிரகங்கள் நின்றால் அதற்குக்கேந்திரங்கள் சந்திரனின்றால் சல்லியமுண்டென்றறியவும் அதற்குப்பலன் ஓடிவருகிற கப்பல் சமுத்திரத்தில் உடைந்தாற்போல் யோகமானது ஸ்திரீகளை மரண மாக்கும் குலத்துக்கெல்லாம் கேடுநேரிடும்-எ-று.

ஆருடந்தன்னிலாகு மதற்குநாளேழுபத்தில்
காரியுமதியுநின்றால் கரியொடுவும்மெலும்பு
வீரியமுடனேகாணு மேலதற்கிரண்டுமூன்றை
சூரியன்மதியுநின்றால் ஆணியுமிருக்குந்தானே.

இ-ள். ஆருடராசிகளில் உதயத்தில் இராகு நின்றாலும் ஏழு காலுபத்தில் சனியும் சந்திரனும் நின்றாலும் கரி எலும்பு இறைக

னிருக்கிறதென்று சொல்லவேண்டியது அதற்குப்பலன் இரண்டு மூன்றில் சந்திரனும் சூரியனும் கூடிநிற்கில் சிலை கருங்கல்காணும் செவ்வாய் கூடிநின்றால் வெண்கலம் பித்தளை ஓடு எலும்பு ஈயம் இவைகளிருக்குமென்று சொல்லுவது-எ-று.

உதயவாரூடந்தன்னி லுடலுயிரறியவேண்டில்
மதியமாய்வந்தநாட்கள் வருமுழுநாள்கடன்னிற்
புதியதாயுடலிதென்றும் பிரபல்லியமாகவெண்ணிப்
பதியவேபலன்கள்சொல்வாய் பகர்ந்தனன்மறையுமாதே.

இ-ள். உதயவாரூடராசியில் சந்திரனின்றராசியில் உடலென்றும் உதயாரூடம் உயிரிரண்டும் இந்தராசிகளில் முழுநாளை யெண்ணிப் பலன்சொல்லும்-எ-று.

கேட்டலக்கினத்திற்நாயுஞ் சூரியன்செவ்வாய்ராகு
இட்டநாலேழுபத்திற் சீரணமதியேசேர்ந்தாற்
பட்டிடுமரங்கள்கட்டை பானையோடெலும்புசாம்பல்
சட்டமாயிருக்குமென்றே தார்சடைமுனிசொன்னாரே.

இ-ள். யாதாமொருவர் கேட்கவரில் [illegible] ஒருராசியைத் தொட்சொல்லி அந்த ராசிக்குச் சனி கூடச் செவ்வாய் ராகு நாலாமிடம் ஏழாமிடம் பத்தாமிடம் அமரபட் [illegible] சந்திரனுங் கூடி யிருந்தால் பட்டமரமும் பானையோடும் எலும்புஞ் சாம்பலு மிருக்குமென்று சொல்லவேண்டும்-எ-று.

அதற்குமேலேழுபத்தில் மந்திரிபுத்திகூடி
அதற்குமூன்றெட்டிலாறி லாதித்தன்வலமதாகில்
இதற்குமோர்பத்திலேலே யிருந்தவன்பெலவானானால்
நிதிக்குமோர்பயமைசொல்லும் நிச்சயமயன்சொன்னாரே.

இ-ள் சந்திரனுக்கு நாலாமிடம் ஏழாமிடம் பத்தாமிடம் இராஜனாகிலும் புதனாகிலும் நிற்கில் அதற்கு 3-6-8-ல் சூரியனிருந்தால் நிதியுண்டென்று சொல்லவேண்டும்-எ-று.

சுக்கிரனுக்கெதிரேபுந்தி தோன்ற பகாரிமன்னன்
வக்கிரமில்லாதிருந்தால் மன்னவாக்காறில்மைந்தன்
நிக்கவேதிரவியங்கள் நிலந்தனிலுள்ளதாகும்
பக்குவமானவெள்ளி பாரினில்மிகவுண்டாமே.

இ-ள். சுக்கிரனும் புதனுங்கூடி அதற்கெதிர் இராசனிருக்க இவர்கள் வக்கிரமில்லாதிருக்க இராசனுக்காறில் சனியிருக்க அந்தப்பூமியில் திரவியமுண்டு அதில்லாவிடில் வெள்ளியாகிலு மிருக்குமென்று சொல்லவேண்டும் எ-று.

வீடுகளுக்கு தெருவாசற்கால்வைக்கு மிலக்கணம்.

ஆவணிமாதம் கட்டுவீட்டுக்குக் கிழக்குப்பார்த்த வாசற்படி வைக்கலாம்.

கார்த்திகைமாதம் கட்டும் வீட்டுக்கு தெற்குபார்த்த வாசற்படி வைக்கலாம்.

மாசிமாதம் கட்டும் வீட்டுக்கு மேற்குபார்த்த வாசற்படி வைக்கலாம்.

வைகாசிமாதம் கட்டும் வீட்டுக்கு மேற்குபார்த்த வாசற்படி வைக்கலாம்.

எந்தமாதங்களில் வாசக்கால் வைத்தாலும் திசையறிந்து வைக்கவேண்டும்.

கடகம் சிங்கம் இந்த இரண்டுராசியில் சூரியனிற்க வீடுகட்டினால் கிழக்குபார்த்த வாசற்படி வைக்கலாம்.

துலாம் விருச்சிகம் இவ்விரண்டுராசியிலுஞ் சூரியனிருக்க வீடுகட்டினால் தெற்குபார்த்த வாசற்படி வைக்கலாம்.

மகரங்கும்பம் இவ்விரண்டுராசியிலுஞ் சூரியனிருக்க வீடு கட்டினால் மேற்குபார்த்த வாசற்படி வைக்கலாம்.

கன்னி மிதுனம் தனுசு மீனம் இந்தராசிகளில் சூரியனிருக்க வீடுகட்டினால் வாசற்கால் வைக்கலாகாது.

மற்றராசிக்காரர் விருச்சிகம் மீனம் கடகம் இந்த மூன்று ராசிக்காருக்குங் கிழக்குபார்த்தவீடு.

ரிஷபம் மகரம் இந்த ராசிக்காருக்கு தெற்குபார்த்தவீடு.

துலாம் மிதுனம் கும்பம் இந்த மூன்றுராசிக்காருக்கு மேற்பார்த்தவீடு.

தனுசு மேஷம் சிங்கம் அந்த மூன்றுராசிக்காருக்கும் வடக்குப்பார்த்தவீடு.

துலாம் இந்ததிக்கிலிருக்கிற ராசிக்கு கர்த்தன் நாம் ராசிக்கு மித்துருத்து மாகையால் நல்லது.

திசையறிந்து வாசற்கால் வைக்கும்விதி.

கிழக்குப்பார்த்த வாசற்படியுள்ள வீட்டுக்கு ஈசான்யமூதல் அக்கினிமூலைவரைக்கு மளந்து அதை 8-பாகம் பண்ணினால் முதற்பாகம் ஆனி.

| | |
|---|---|
| 2-வது பாகம் | சோரம் |
| 3-வது பாகம் | தனப்பிராப்தி |
| 4-வது பாகம் | இராஜஅனுமானம் |
| 5-வது பாகம் | புத்திரவிர்த்தி |
| 6-வது பாகம் | சுகம் |
| 7-வது பாகம் | துக்கம் |
| 8-வது பாகம் | ரோகம் |

மேற்குப்பார்த்த வாசற்படிக்கு நிருதிமூலை முதல் வாயுமூலை வரைக்கும் அளந்து 8-பாகம் பண்ணினால்.

| | |
|---|---|
| 1-வது பாகம் | ஆனி |
| 2-வது பாகம் | சத்துருவிர்த்தி |
| 3-வது பாகம் | சுகம் |
| 4-வது பாகம் | தனம் |
| 5-வது பாகம் | பாக்கியம் |
| 6-வது பாகம் | சுகம் |
| 7-வது பாகம் | பயம் |
| 8-வது பாகம் | நாசம் |

வடக்குப்பார்த்த வாசற்படிக்கு வாயுமூலைமுதல் ஈசான்ய மூலைவரைக்கும் அளந்து எட்டுபாகஞ்செய்தால்.

| | |
|---|---|
| 1-வது பாகம் | மனையாள்நாசம் |
| 2-வது பாகம் | பலயீனம் |
| 3-வது பாகம் | தசஆனி |
| 4-வது பாகம் | தானியவிர்த்தி |
| 5-வது பாகம் | தனம் |
| 6-வது பாகம் | சௌக்கியம் |
| 7-வது பாகம் | துக்கம் |
| 8-வது பாகம் | பாதகர்மம் |

தெற்குபார்த்த வாசற்படிக்கு அக்கினிமூலைமுதல் நிருதிமூலை வரையில் எட்டுபாகம் பண்ணினுல்.

| | |
|---|---|
| 1-வது பாகம் | தனஆனி |
| 2-வது பாகம் | சத்துருவிர்த்தி |
| 3-வது பாகம் | சுகம் |
| 4-வது பாகம் | தனவரவு |
| 5-வது பாகம் | பாக்கியமுண்டாம் |
| 6-வது பாகம் | நன்மையுண்டாம் |
| 7-வது பாகம் | பயம் |
| 8-வது பாகம் | நாசமாம் |

இந்தப்பாகங்களின் இயற்கைதெரிந்து நல்ல பாகத்தைப் பார்த்து வாசற்கால் வைக்கவேண்டியது.

நவக்கிரகபலன்களறிந்து வாசற்கால்வைக்கும் நிர்ணயம்.

கிழக்குப்பார்த்த வாசற்படிக்கு ஈசானியமுதல் அக்கினி மூலைவரைக்கும் 9-ம் வரைக்கும் பண்ணவும்.

தெற்குப்பார்த்த வாசற்படிக்கு அக்கினி மூலைமுதல் நிருதி மூலைவரைக்கும் 9-பாகம் பண்ணவும்.

மேற்குப்பார்த்த வாசற்படிக்கு நிருதிமூலை முதல் வாயுமூலை வரைக்கும் 9-பாகம் பண்ணவும்.

வடக்குப்பார்த்த வாசற்படிக்கு வாயுமூலைமுதல் ஈசானிய மூலைவரைக்கும் 9-பாகம் பண்ணவும்.

இந்நான்கு திசைக்கும் முதற்பாகம் சூரியன் 2-வது பாகம் சந்திரன் 3-வது பாகம் அங்காரகன் 4-வது பாகம் புதன் 5-வது பாகம் குரு 6-வது பாகம் சுக்கிரன் 7-வது பாகம் சனி 8-வது பாகம் ராகு 9-வது பாகம் கேது இந்த நவக்கிரபாகத்தில் பிரகஸ்பதியிருக்கிற பாகத்தில் பிரதானம் கோயிலுக்கு வாசக்கால் வைக்கலாம்.

சுக்கிரன் பாகத்தில் வீட்டிற்கு வாசக்கால் வைக்கலாம்.

புதன் பாகத்தில் மாட்டு தொழுவத்திற்கு வாசக்கால் வைக்கலாம்.

மேலும் புதன் குரு சுக்கிரன் இவைகளில் கோயிலுக்கும் வீட்டிற்கும் மாட்டுத் தொழுவத்திற்கும் வாசக்கால் வைக்கலாம்.

வாசக்காலுக்கு இடதுபக்கத்தில் கதவுவைக்கப்படும்.

இப்பால் ஏழுசாணீளமும் 3-சாணகலமுள்ள வாசக்கால் உத்தமம் 9-சாணீளமும் 5-சாணகலமுள்ள வாசக்காலும் உத்தமம்.

இரண்டு மரத்தினுல் வாசற்கால் பண்ணலாகாது மூன்றுவித மரத்தினுல் கட்டில் செய்யலாகாது.

கதவுக்கு ஒற்றைப்படை பலகைசேர்த்து செய்யவேண்டும் இரட்டைப் பலகைசேர்த்துப் பண்ணலாகாது.

வீட்டு வாசற்படிக்கு எதிரில் கட்டைச் சுவரிருந்தால் சத்துருபயமாம்.

தெருவாசற் படியுயர்ந்து உள்வீட்டு வாசற்படி தாழ்ந்திருக்கக்கூடாது அப்படியிருக்கில் வரும்பலன் நீங்கிவிடும்.

முகூர்த்தம்.

ஆலயநகரம்பட்டணங்கிரக மழிஷ்யதடாககூபமுமாஞ்
சிலவாஞ்சிற்பன்செய்யின்றகிரியைச் செய்வதைநீக்கியவேறோர்
காலத்திலன்னியசாதியோன் செய்தாற்றுனுமன்னவர்தமக்குஞ்
சாலவேகர்த்தன்றனக்குமேதோஷச் சஞ்சலமதுவுமுண்டாமே.

இ-ள். ஆலயங்கள் பட்டணங்கள் கிரகங்கள் தடாகங்கள் கிணறுகளிவைகளை சிற்பனையால் செய்யாமல் அன்னியவர்ணத்தான் கையினுல் மூர்த்தஞ்செய்தால் அரசர்க்கும் எஜமானுக்கு மாகாது-எ-று.

முழக்கோல்.

துண்ணியயவனிலெட்டு அரிகிடிற்பஞ்சின்றாளா
மெண்ணியபஞ்சின்றாளோ கொட்டமமயிர்முனைக்கு
நண்ணியமயிரின்கூர்மை நவிலெட்டுநலமதாகுக்
திண்ணமாங்கடுகுவெட்டிச் செப்பவேணுமொன்றுமே.

இ-ள் அணு எட்டுகொண்டது ஒரு பஞ்சின்றுள் எட்டுகொண்டது ஒருமயிர்பனை எட்டுகொண்டது ஒருமணல் மணல்எட்டுகொண்டது ஒருகடுகு எட்டுகொண்டது ஒருமூங்கிலரிசி-எ-று.

வேணுமோரெட்டதாகில் வேண்டியவிரலொன்றுகுந்
தானுவல்விரலாறுனல் தசமைசாலகமதாகும்
ஊணியவரையேவிள்ள முயன்றிடுமகமதாகும்
காணுமேமுக்காற்பின் னுங் கருதியமத்திபந்தான்.

இ-ள். மூங்கிலரிசி எட்டுகொண்டது அங்குலம் ஆறுகொண்டது கால்முழம் அதற்கு அகமதாமென்றுபெயர் அங்குலம்பனிரெண்டு கொண்டது அரைமுழம் அதற்கு அதமமென்று பெயர் அங்குலம் பதினெட்டுகொண்டது முக்கால் முழமென்றும் அதற்குப்பெயர் மத்திமமென்றும் பெயராமென்றவாறு.

சாதியுமொன்றதானற் றருமுழமுத்தமந்தான்
றீதரும்பிரமரோடு சிறந்தக்ஷத்திரியர்சூத்திரர்
சூதருவிவேகவைசியர் சுபமுடன்சொல்வதற்கு
நீதியார்புனைந்தபாடல் நெறிபடவியம்பலுற்றேன்.

இ-ள். அங்குலம் இருபத்து நான்குகொண்டது ஒரு முழமென்றும் அதற்கு தந்திமென்றும் மானங்குலமென்றும் பெயராம் ஆகையால் பிரமக்ஷத்திரிய வைசியசூத்திரர் இவர்களுக்கும் இன்ன முழமென்றும் சொல்லப்படுவோம்-எ-று.

வேறு.

சிறந்தசாதிநான்கினுக்குஞ் சிறுகோல்வரிசைசெப்பிடுங்கா
லைறந்தமூங்கில்மறையவர்க்கா ஆச்சாக்ஷத்திரியர்க்காகும்
நிறைந்ததேக்குவணிகருக்காம் நெடியவேங்கைசூத்திரர்க்காம்
முறிந்திடாமலவரவர்க்கு முழக்கோலதுகொண்டிளப்பதுவே

இ-ள். சாதிநான்கினுக்கும் முழக்கோல் விபரமாவது மூங்கிலாற் செய்தகோல் பிராமணர்களுக்காம் ஆச்சாமரத்தின்கோல் அரசர்களுக்காம் தேக்கினாற்செய்தகோல் வைசியர்களுக்காம் உத்திரவேங்கைமரத்தினாற்செய்தகோல் சூத்திரருக்காம்.

வாஸ்துவிழிநோக்கில் இருபத்தெட்டுபங்கில் முகூர்த்தம்.

வேறு.

வாஸ்துபுருஷன்விழிநோக்கில் மனைக்குமுகூர்த்தம்செய்வேண்கல்
பார்த்துமலையாமேழும் பகுத்துகாலிற்பதினேழுங்
காத்துத்தலையிரீரைந்துந் தள்ளிநடுவிலொருபாக
மேத்தமாகமுகூர்த்தமிட விராசசம்பத்துண்டாமே.

இ-ள். வாஸ்துவின் விழிநோக்கறிந்து முகூர்த்தம் செய்வதாகையால் அந்தமனையை இருபத்தெட்டுபாகஞ்செய்து காலில் பதினேழுபாகந்தள்ளி தலையில் பத்துபாகந்தளளி நடுவிலொரு பாகத்தில முகூர்த்தஞ்செய்தால் இராஜ சம்பத்துண்டாம்-எ-று.

சமயமைந்துக்கும் வாஸ்து அதிகார லட்சணம்-வேறு.

செய்யலாஸ்துடநாட்டந் திறமுடன்விழித்துநோக்கல்
துய்யதோர்கடிகைமூன்று துரிதமுக்காலுக்குள்ளே
உய்யவேமுதலாம்வேளை யுலகத்தோர்கடிகைமுக்கால்
நையருவகையவேந்த சுத்திராஜபம்முண்டாமே.

இ-ள். வாஸ்துவின் அதிகாரலட்சணமாவது நாழிகைமூன்றே முக்காலுக்குச் சமயம் ஐந்து முதற்சமயன் கடிகை முக்காலுக்குள் தந்தசுத்திசெய்வானதில் முகூர்த்தஞ்செய்தா லாசர்பயமுண்டாம்.

ஏற்றியவிரண்டாம்வேளை யெழிலுயர்கடிகைமுக்கால்
போற்றியல்தானஞ்செய்வான் பொருந்திடபீடையுண்டாம்
சாற்றியமூன்றும்வேளை தக்கதோர்கடிகைமுக்கால்
மாற்றியபூசைசெய்வான் வறுமையால்வாடுமென்றே.

இ-ள். வாஸ்து இரண்டாஞ்சமயமாவது கடிகைமுக்காலுக் குள் ஸ்நானஞ்செய்பவன் முகூர்த்தஞ்செய்தால் பீடையுண்டாகும் மூன்றாஞ்சமயமாவது கடிகைமுக்காலுக்குள்ளே பூசைசெய்வன் அதில் முகூர்த்தஞ்செய்தால் வருமையால் வாடுவார்கள்-எ-று.

பெருகியகரணம்வேளை பெயர்கடிகைமுக்கால்
அருமையாயசனஞ்செய்வ னழகியபுத்திரருண்டாம்
திறமையாயைந்தாம்வேளை சேர்ந்ததோர்கடிகைமுக்கால்
மருவுதாம்பூலங்கொள்வன் மகிழ்ந்துவுத்தமமென்றோதே.

இ-ள். நாலாஞ்சமயமாவது கடிகை முக்காலுக்குள் போசனம் அதில் முகூர்த்தஞ் செய்தால் புத்திரசந்தான முண்டாகும் ஐந்தாம் சமயமாவது கடிகை முக்காலுக்குள்ளே தாம்பூலங்கொள் வனதில் முகூர்த்தஞ்செய்தால் மகா வுத்தமம்.

மனையில் மண்ணின்சுவை லட்சணம்-வேறு.

தயிரோடுநெய்தேனெண்ணெய் நாக்கியவுதிரத்தோடு
மயிர்பலசிறுமீன்பட்சி மற்றதோர்பொல்லாதநாற்றம்
பயிரோடுபலமுங்காணு பாழ்படுகனையடுக்கில்
வயிரவேல்விழியினளே மண்களின்குணங்கள்தானே.

இ-ள். மணமாவது தயிர் நெய் தேன் இரத்தமாயிருக்கும் மீன் சிக்கவுய் பட்சிமோர் இவ்வித மணமுள்ள பூமியில் பயிரிட்டா லும் பலியாது மனைபாழாம்-எ-று.

சங்குஸ்தாபனம்.

உத்தராயணமுமாக வுயர்ந்தநல்லவாரம்பார்த்து
நித்திரைநக்ஷத்திரங்கள் சிறப்புடன்பார்த்துவாணிற்

சுத்தமாய்களங்கமில்லாச் சூரியன்விளங்கும்போது
நத்திரேயவ்விடத்தில் நவி[illegible]னினிதுகேளே.

இ-ள். சங்குஸ்தாபிக்கும் காலமாவது உத்தராயணத்தில் வாரம் லக்கினம் நட்சத்திரம் இவைகளை திரமாகப்பார்த்து ஆகாயத்தில் களங்கமில்லாமல் சூரியன் விளங்கும்போது செய்யும் விபரத்தைச் சொல்லுவோம்-எ-று.

ஒருமுதண்டிக்கொருமுதண்டேதா னுண்மையாய்ச்சதுரமாக்கி
விரவியமட்டங்கொண்டு விளங்கநீர்மட்டஞ்செய்து
பரவியநடுவின்வட்டம் பாவுமண்டலம்போல்வீசி
திருந்தியசங்குனைச் செய்யெபிரமாணஞ்செய்யே.

இ-ள். ஒருமுதண்டிக் கொருமுதண்டு சதுரஞ்செய்து நடுவில் விருத்தமாய்க்கீறி அதில்சங்கை சங்குப்பிரமாணஞ் சொல்வாய்-எ-று.

சங்குசெய்யப்பட்டமரம்.

உத்தமசங்குக்கேதா னுயரமோர்முழமதாகும்
நத்தியவடியினாறு லங்குலங் கவிலக்கேளு
சுத்தமாய்தலைகனந்தான் சொல்லுமங்குலமொன்றாகும்
பக்தியாய்த்திரளநன்றாய்ப் பரிவுடன்கடைதல்செய்வாம்.

இ-ள். சங்குசெய்யும் விதமாவது ஒருமுழம் அடியிற்கனம் அங்குலம் ஆறு தலைகனம் அங்குலம் ஒன்று அதற்காகவட்டமாய் திரளக்கடைச்சல் செய்யு-எ-று.

தந்தியின்கொம்புவாசச் சந்தனம்வன்னிதேக்கு
முந்தியபுளியிரேண்டு முயர்கருங்காலிசெய்வாம்
விந்தையாயிவையல்லாமல் வெண்பால்மரத்தாலும்
அந்தமாம்வயிரத்தோடே யமைக்கதோர்பிரிவுசொல்வாம்.

இ-ள். சங்குசெய்மரம் யானைக்கொம்பு சந்தனமாம் வன்னி தேக்கு புளியின்வைரம் கருங்காலி இவையல்லாமல் எந்தமரத்தின் பாலுண்டோ அதிலும்செய்யலாம் ஆகையால் தேவசாதி நான்குக்கும் விபரஞ்சொல்லுவாம்-எ-று.

தேவர்முதல் நான்குசாதிக்குஞ் சங்குசெய்மரம்.

சந்தனந்தந்திகொம்பு தகைமைசேர்தேவர்க்காகும்
விந்தைசேர்மறையோர்க்கேதான் மிருகருங்காலிவன்னி
சிந்தைசேர்மன்னர்க்காகுந் தேக்குவைசியர்க்காகும்
புந்திசேர்புளியின்வைரம் புகலுஞ்சூத்திரர்க்கென்றே.

இ-ள். யானைக்கொம்புஞ் சந்தனமாமுந் தேவர்களுக்காகும் கருங்காலி பிராமணர்களுக்காகும் புளியம்வயிரம் சூத்திரர்களுக்காகும்.

மேவுமுத்தரபாகத்து மிகுத்ததெட்சணபாகத்து
மாவலச்சாரமுண்டு மந்தமண்டலத்தில்வந்த

ஒவியபுள்ளிரெண்டி லோடவேகிழக்குமேற்குந்
தாவியவன்னுன்றன்னிற் றனைமையறியலாமே.

இ-ள். உத்திராயணத்திலுந் தெட்சணாயனத்திலும் அவச்சாயல் பாதச்சாயலுண்டு அந்தமண்டலத்தில்வந்த புள்ளிரண்டிலும் நூலையோடவாங்கி கிழக்கு மேற்குமறிவாம்-எ-று.

இரண்டுபுள்ளியின்பால்மீது ஏகவேவெளியில்நன்றாய்த்
திரண்டசேற்கயல்மீனைச் சிறப்புடன்வீசிப்பின்னு
மூரண்டசேல்மீனின்வாலின் முகத்திலுங்கூடுநூலை
இரண்டதாயோடவாங்கி யாகநாலிரண்டுஞ்சொல்வாம்.

இ-ள். இரண்டுபுள்ளியின்மீது கயல்மீனைவீசி மீனின்முகத்திலும் வாலிலுங் கூடுதலையிரண்டையும் ஓட்வாங்கிக்கொள்ளுவாம்-எ-று.

திரமைதெக்ஷணபாகத்தின் சிறந்ததெக்ஷணத்தின்மீதே
உறமையுத்தரபாகத்தி லுத்தரபாகமீதே
முறைமையாமிரண்டிடத்தி லுயர்ந்திடுநூலைப்பெற்று
உறமுகின்கொள்ளுவான்பின் னுண்மையைவிளம்புவேனே.

இ-ள். தெக்ஷணாயனத்திலும் உத்தராயணத்திலும் இரண்டு நூலையும் பெற்றுக்கொள்வாயாக-எ-று.

சாயல் மாதவிலக்கம்.

மேவுவைகாசியோடு மிகுபுரட்டாசிரண்டுந்
தாவரச்சாயலில்லை சாற்றுவேனினிதுகேளும்
ஆவணியானியோடு மைப்பசிசித்திரைமாத
மேவியசாயல்ரண்டு மூண்மையங்குலமென்றோதே.

இ-ள். வைகாசி புரட்டாசி இவ்விரண்டு மாதத்திற்கும் விலக்கமில்லை ஆவணி ஆனி ஐப்பசி சித்திரை இந்நான்கு மாதத்திற்கும் இரண்டங்குலம் விலக்கம்-எ-று.

ஆடிகார்த்திகையாங்கூனி யங்குலம்நான்குசாயல்
நீடுமார்கழியுமாசி நிரைவிரலாறுசாயல்
தடுதைமாதமெட்டுத் திறமையங்குலஞ்சாயற்றான்
பாடலாம்புகழைகூறப் பண்பிதுபடைகருவேனே.

இ-ள். ஆடி கார்த்திகை பங்குனி இம்மூன்றுமாதத்திற்கும் நாலங்குலஞ்சாயல் மார்கழி மாசி இவ்விரண்டு மாதத்திற்கும் ஆறங்குலஞ்சாயல் தைமாதம் எட்டங்குலம்சாயல்-எ-று.

சகுனம்.

மன்னியநிறைகுடங்கள் மாரஞ்சொல்லும்வண்ணான்
மின்னியதயிர்பால்சோறு விடக்குடன்மதுக்குடங்கள்
கன்னியும்சாரைவேசி கரும்புகட்டெதிரேகாணில்
மென்னி[illegible]டைபார்ப்பானெதிர்வரகருமநன்றே.

இ-ள். சகுனமாவது நிறைக்குடம் வண்ணான் தயிர்க்குடம் பாற்குடம் அன்னம் மதுக்குடம் எவ்வனஸ்திரீதாரை தேவதாசி கரும்புகட்டு இரட்டைப்பார்ப்பார் இவர்களெதிர்வந்தால் மகாவுத்தமமென்று சொல்லவும்-எ-று.

கொடிநரிகிள்ளைவேங்கை கூர்முயல்கோழிகொக்கு
வடிவுளமஞ்ஞையோந்தி மரையொடுபசுக்கள்மீதே
கடிகமழ்நாரைநாவி கடுவாயன்செம்போத்தென்றும்
வடிவுடன்வலத்திற்சென்றால் வந்திடுங்கருமநன்றே.

இ-ள். நரி கிளி வேங்கை முசல் கோழி கொக்கு மயில் ஓந்தி மான் பசு மாடு நாரை அணிப்பிள்ளை கழுதை செம்போத்து இவைகள் வலதுபக்கஞ்சென்றால் மகாவுத்தமம்-எ-று.

செய்யபொன்செய்யவாடை செம்பட்டைசுருட்டிநொண்டி
மெய்யினல்கயிறில்வந்தான் விரிதலையொற்றைக்கண்ணன்
தையநாவிழந்தமாது தடிக்கொம்புகாண்பானாகில்
கையிலேயையறுகானைக் காலன்வாய்ப்படுவன்றானே.

இ-ள். அழுக்கு வஸ்திரத்தையுடையவன் செம்பட்டைத்தலையன் சுருட்டைத்தலையன் நொண்டி முகத்தில்மயிரில்லாதவன்விரிந்த தலையுடையவன் ஒற்றைக்கண்ணன் விதவைப்பெண் தடிக்கொம்புடையவன் கயிறுடையவன் இவர்களெதிர்வந்தால் உயிருக்கு பயம்வரும்-எ-று.

தலைவிரிமொட்டைமட்டை தவசிசன்னியாசிபார்ப்பான்
முலையிலாக்கன்னிகொம்பு மூக்கறைவிரகுக்கட்டு
கலமிலாமுகநேயாக நாவிதன்குருடன்செக்கான்
பலரும்வந்தெதிரேகாணிற் பலனிலாக்கருமமாமே.

இ-ள். விரிதலையுடையவன் மொட்டைத்தலையன் பாம்பு சன்னியாசி ஒற்றைப்பிராமணன் முலையிலாப்பெண் புதுப்பானை மூக்கில்லாதவன் வாணியன் இவர்களெதிரேவந்தால் ஆகாது-எ-று.

தேங்காய் சகுனம்.

முடிபெருத்தவட்டமிடும் நிருவேசேரு
மூன்றிலொருபங்குடைந்தாற் செய்தால்தோஷம்
நெடியவைந்திரண்டுக்குத் துலையாச்செல்வம்
நீக்கிநாம்பேடித்தால் நீடிவாழ்வாம்
கடுகதனையுள்ளானால் ரத்தினஞ்சேருங்
கணக்கவிரண்டிற்குங் கருதுபூசல்
வடிவமெனுந்தமிழோது மயனார்சொன்ன
வளமைத்தேங்காய்ச்சகுன வண்மைகேளே.

இ-ள். முகூர்த்தஞ்செய்து தேங்காயுடைத்தால் முடிபெருத்து அடிசிறுத்தில் இலட்சுமிவிலாசமுண்டு மூன்றுபங்கு சிரசிலும் ஒருபங்கு பாதத்திலுமானாற் சந்தோஷமுண்டு ஐந்து இரண்டு

மூன்றானால் செல்வமுண்டு நரம்புபிடித்தால் நீடூழிவாழ்வார்கள் கடுகுபிரமாணம் சிதறுள்ளே விழுந்தால் இரத்தினஞ்சேரும் நடு விற்பிளந்தால் மகாஅபாத்தை விளைவிக்கும்-எ-று.

ஒன்றிரண்டுதனக்கு நன்மையாறதலாம்
யுடைபுவெகுஅன்பமது வோதக்கேளு
அண்டுவமயிற்கண் டெறிந்தாள்மரணமாவை
ஓடவுநல்லோடு விட்டால்சனவெல்லம்
விண்டோடுதெறித்திடு மேற்பிணியாமெய்யின்
மேனியிலேவிழுந்தால் விலையுமாவன்
பண்டுதமிழறிந்தோது மயனார்சொன்ன
பாடற்றேங்காய்ச் சகுனம்பகாக்கேளே.

இ-ள். நடுமத்தியிலுடைந்தால் நன்மை ஆறுசக்கல் நான்கு சக்கலாயுடைந்தால் வெகுஅன்பம் சரீரத்தில் தேங்காய்க்கண் தெரிந்தால் எஜமானன்மரணமாவான் ஓடிவிட்டால் புசிப்பதற்கு அன்னங்கிடைக்க மாட்டாது ஓடுதெறித்தால் சரீரத்தில் பிணியுண்டாகும் பூமியில்விழுந்தால் எஜமான்வீடு வாசலைவிட்டு அக்கப்படுவான்.

சுக்கிரபலன்.

இருங்குருவெள்ளிவார மிலக்கினநாலேழ்தன்னில்
வருங்கதிரவனிற்க வந்தனன்மூன்றுநிற்கப்
பெரும்புரங்கோயில்வீடு பீடுயேசெய்வாராகில்
திருந்தவேயாது நூறு தீர்க்கமாம்விளங்குமாதே.

இ-ள். வியாழம் வெள்ளிவாரமும் லக்கினநாலும் ஏழுசூரியன் ஆறிலும் இராகன் மூன்றிலும்நிற்க கோபுரம் சாலைவீடு மாளிகை இவைகள் கட்டில் நூறுவயது பெற்றுவிளங்கும்-எ-று.

மனைகோலுகையின் லக்கினமுகூர்த்தம்.

தக்கசென்மநாலுபத்திற் சசிதாநிற்கப்
தருபதினொன்றிற் குருவுங்குசனுமந்தன்
மிக்கவிவாதானிருந்து முகூர்த்தஞ்செய்தால்
மேவியதோர்மனைதனக்கு வயதுநூறாந்
தக்கதொருலக்கினத்திற் குருவுஞ்சுக்கிரன்
றருமைந்தில்மூன்றுமெய்யோன் றகைமையாரில்
திக்குயருங்குதனிருந்தால் குத்துக்கேதான்
பதிவயது நூறெனவே செப்பினரே.

இ-ள். ஜென்மலக்கினத்திற்கு நாலுபக்கத்தில் சந்திரனிற்க பதினொன்றில் இராகன் செவ்வாய் சனி இவர்களிருக்க மனைமுகூர்த்தஞ்செய்தால் வயதுநூறுவருஷம் விளங்கும் லக்கினத்தில் குருவும் சுக்கிரனுமிருக்கும் மூன்றிற் சூரியனிருக்க ஆறில் செவ்வாயிருக்க முகூர்த்தஞ்செய்யில் அந்தமனை நூறுவருஷம் விர்த்தியாய் விளங்கும்.

மேவியசிரிலக்கினத்திற் சோமனுனில்
விரும்புதன்குரு வஸ்தமானகாலங்
தாவியபட்டணநகரா மூகூர்த்தஞ்செய்தாற்
றனைதம்வயதிரு மூன்றுநூறதாகும்
மேவியகோருதயத்திற் பத்தில்வெள்ளி
மொருமூன்றிற் புதன்குருவுமஸ்தமான
மாவுயர்பட்டணநகர் மூகூர்த்தஞ்செய்யில்
வருநூறுயிருமூன்றாய் வகுத்தவாறே.

இ-ள். லக்கினத்தில் சந்திரனிற்க 4-ல் புதனிருக்க குருஅஸ்தமாக மூகூர்த்தஞ்செய்யில் அந்தமனைக்கு அறுநூறுவயதாகும் இலக்கினத்தில் பத்தில் சுக்கிரனிருக்க மூன்றில் புதனிருக்க குரு அஸ்தமானமாக மூகூர்த்தஞ்செய்யில் அந்தமனைக்கு அறுநூறு வயது விளங்கும்.

பொங்குகுருமக்ஷத்திரத்தில் வெள்ளிவீட்டிற்
புதனிருக்க சுபமூகூர்த்தம்புரிவீராகில்
தங்குவயதிருநான்கு நூறதாகுந்
தருமிரவியுதயமஸ்த மானகாலஞ்
சங்கைதருபத்திலே சோமனிற்கத்
தனைமைநகராலயமே மூகூர்த்தஞ்செய்தால்
இங்கிதமாய்வயதுமொரு சகஸ்திரமென்று
இம்மொழிக்குமையனுரையு மியம்பினரே.

இ-ள். குருவக்ஷத்திரத்திலிருக்க வெளிவீட்டில் புதனிருக்க மூகூர்த்தஞ்செய்யில் எண்ணூறுவயதிருக்கும் சூரியன் அஸ்தமானகாலம் பத்தில் சந்திரனிருக்க ஆலயமூகூர்த்தஞ் செய்யில் ஆயிரம் வருஷம் விளங்கும்-எ-று.

தேசுயர்ந்தசுக்கிர னுதயமாகத்
திருந்தியதோ ரேழிலேகுருவிருக்க
மாசகன்றபத்திலே சோமனிற்க
வளர்மூகூர்த்தமாலயமே மகிழ்ந்துசெய்யில்
பேசிவருவயதுமொரு சகஸ்திரமென்றே
பேசலாமோரைதனில் வெள்ளிநிற்க
வாசகுருக்ஷேத்திர மானகருக்கேதான்
வருவனற்றேசமில்லை மகிழுவாரே.

இ-ள். சுக்கிரனுதயமாக ஏழில் இராசனிருக்க பத்தில்சந்திரனிருக்க மூகூர்த்தஞ்செய்யில் ஆயிரம்வருஷம் விளங்கும் இலக்கினத்திற் சுக்கிரனிருக்க குருக்ஷேத்திரத்திலிருக்க மூகூர்த்தஞ் செய்யில் அக்கினிபயமில்லை-எ-று.

வருங்கடகமகரமது மீனந்தன்னில்
வளமைமிகு சந்திரனுமருவிநின்றால்
திருவுயர்ந்தகிரகமதில் வைக்கோர்போடச்
செயமதுவாம்பூராடந் திருவோணந்தான்

றருவுயர்ந்தரோகணியுந் திரங்கண்மூன்றுந்
தங்கியவாலியமது சாற்றக்கேளு
வருமிருகசீரிடத்திற் குருவிருக்க
வருகுருவாரங்கள் செயமகிட்சியாமே.

இ-ள். கடகம் மகரம் மீனம் இவைகளிற் சந்திரனிருக்க வைக்கோல்போட்டால் ஜெயமாகும் பூராடம் திருவோணம் உரோகணி உத்திராடம் உத்திரட்டாதி ஆயிலியம் மிருகசீரிடம் இவைகளில் இராசனிருக்க குருவாரத்திற்செய்ய மகிட்சியுண்டாம்-எ-று.

திருந்துசலராசியதில் வெள்ளிநிற்கத்
திருந்தசுக்கிரவாரமு மாயிருந்தாலாக்கம்
பொருந்துசரராசிதனிற் சோமனிற்கப்
புகலுதிங்கள்வாரமதா யிருக்குமாகில்
வருந்துமகமனையாளுக்கெற்பமாகில்
வளமுகூர்த்தங் குடிபுதவுமத்தியந்தான்
வருந்தியதோர்திரிகால னிதுவாமென்று
மயனுரைக்குட்வாறதனை மகிழ்ந்துயாமே.

இ-ள் சகலராசியில் சுக்கிரனிருக்க சுக்கிரவாரமாயிருந்தால் செல்வமுண்டு சகலராசியில் சந்திரனிருக்க திங்கள் வாரமாகில் மனையாள் கெற்பமாயினும் முகூர்த்தஞ்செய்யினுங் குடிபுகினும் மத்தியமென்றும் மயனென்பர்சொல்லிய வாக்கியம்-எ-று.

வாசல் சூரியன் கவி.

சூரியன்வீச்சேயாகிற் றலைவிலாச்செல்வமுண்டாம்
பாரியமதிதானின்றாற் பணமில்லையோகமில்லை
சாரியாயிரண்டும்பார்த்துத் தயவுடன்வன்னிநின்றார்
பாரினைக்கோல்பவர்க்குப் பாக்கியமெத்தவுண்டாம்.

கிணறெடுக்குமிலட்சணம்.

கலிவிருத்தம்.

ஆனமேஷமறையுங் கற்பாறையாம்
வானரிஷபம்வரையுந் தண்ணீராரும்
பானமிதுனம் பருகக்கடற்கரை
மானகற்கடகம் மதிக்கவாரேறுமே
வேந்தன்சிங்கம்விரும்பு கற்பாறையாம்
ஏந்துச்சனிசனயித்தோர் தெற்குமூன்
போந்தக்கல்லு புகழும்வடக்காம்
கூந்தல்மோழைகு முறவருகுமே
ஆயபுற்று வமையுந்துலாமிடம்
தூயவிருச்சிகந் தொன்றும்பழங்கிணர்

ஏயவே தனுசுக்கு வாம்மட்டமூன்
பாயவும் இடக்கும் பழமோழையே
ஆனகர்மமறையு மிடிக்கரை
தானகும்பர் தடிக்குடலைக்கல்
மீனந்தெற்கு மிசைந்தகலவர்க்கு
ஊனமில்லா துயர்ந்த தண்ணீராமே.

| | |
|---|---|
| மேஷம் | கற்பாறை |
| ரிஷபம் | தண்ணீர் |
| மிதுனம் | கடற்கரை |
| கடகம் | ஆரோடும் |
| சிங்கம் | கற்பாறை |
| கன்னி | தெற்குவடக்குமோழைவரும் |
| துலாம் | புற்று |
| விருச்சிகம் | பணங்கிணறுதங்கியது |
| தனுசு | வாய்வுமட்டத்துக்கிழக்கில்மோழை |
| மகரம் | இடிக்கரை |
| கும்பம் | குடலைக்கல்லு |
| மீனம் | தெற்குகல்லுவடக்குதண்ணீர் |

மனையில்புற்றெழுலட்சணம்.

அறையுமிந்திர னுணகிழக்கினில்
நிறைவுஞ்செல்வ நெருங்கிப்பெருகிடுங்
இறையுமக்கினி தென்கிழக்காயிடில்
குறையுமேமனை குமிறியிடியுமே
போற்றுமனைமன்புகலுந் தெற்காயியில்
கோற்றுதுக்கம் அடருமேமாந்தற்கு
ஏற்றுநிருதியேறுங் தென்மேற்கிடில்
நாற்றிசைகீர்த்தி நவிலும்வாழ்வுண்டாமே
கொண்டவருணன் கூறுமேற்காயிடில்
வண்டமிழ்ப்பாலர் வருஞ்செல்வங்களாம்
தண்டிடாவாய்வு தரும்வடமேற்காகில்
பண்டதங்கள் பொய்யாதுமரணமே
பாருமேகுபேரன் வடக்காயிடில்
சீருஞ்செல்வ சிறப்புமுண்டாகுமே
வாருமீசன் வடகிழக்காயிடில்
கோரும்வியாதி குடியுங்கசிக்குமே
பாரிலட்சுமணர் பகரும்நடுவினில்
சேரும்பிரமம் சிறக்கயிவற்றின்மூன்
கூறுமாட்டங் குறைந்திடும்போதெலாங்
கோறுஞ்சிந்தை குறிக்குந்தெய்வங்களே

வஞ்சிகேளும் வருந்தருமமாம்
மிஞ்சுபிரம மிகுத்திபேர்த்தானத்தில்
செஞ்சொல்புற்று செழிக்கக்கிளம்பிடிற்
கஞ்சனுரைகருது மிசைசாவே.

| கிழக்கு | இந்திரன் | மேற்கு | வருணன் |
|---|---|---|---|
| தென்கிழக்கு | அக்கினி | வடமேற்கு | வாய்வு |
| தெற்கு | இயமன் | வடக்கு | குபேரன் |
| தென்மேற்கு | நிருதி | வடகிழக்கு | ஈசானியம் |

இவர்களுக்கு நடுவில்பிரமம் இவற்றின்நன்மைசொல்லும் போது தெய்வச்சிந்தைதரும் பிரமத்தானத்தில் புற்றெடுக்குமாகில் சாவு.

| கிழக்கு | செல்வம் | மேற்கு | புத்திரருண்டாம் |
|---|---|---|---|
| தென்கிழக்கு | மனையிடியும் | வடமேற்கு | மரணம் |
| தெற்கு | ஆக்கம் | வடக்கு | நன்மை |
| தென்மேற்கு | வாழ்வுண்டாம் | வடகிழக்கு | வியாதியுண்டாம் |

மாதபலன்கள் சித்திரைமாதம்.

செப்புஞ்சித்திரை சிரந்தமதிதனில்
ஒப்புமாளிகை யொவ்வும்மைத்திடில்
தப்பிலாமற்றன் மதற்காளியாம்
மெய்ப்புடன்மயன் விரும்பியுரைத்ததே.

வைகாசிமாதம்.

பேசும்வைகாசி பெருக்கமாளிகட்டிடில்
தேகம்புருஷ செயப்பிரதங்களாம்
நேமாம்பெண்டீர் நெரிக்குஞ்சுபாபலாம்
மாசிலாமயமன்னர்க் கரைத்ததே.

ஆனிமாதம்.

உள்ளராசியுரைக்கிறேன் மாந்தர்க்கு
தெள்ளுமாளியில் திடமாளிகட்டிடில்
பிள்ளைகுட்டிபுகல் மிருத்துபயம்
கொள்ளமயனுரை கூறிய தன்மையே.

ஆடிமாதம்.

சொல்லுமாடி தொடர்ந்தமாளிகட்டிடில்
சொல்லுங்காராம் பசுக்கள்நஷ்டங்களாம்
சொல்லுஞ்செல்வமுஞ் சீருமழுந்திடும்
சொல்லுமயனுர் தொகுத்தசிற்பநூலே.

ஆவணிமாதம்.

உரைத்திடுமாவணி மாளிகைகட்டிடில்
நிரைத்திடும் பந்துவர்க்கமாம்
உரைத்திடும்பல்வாக்கு பொய்யாதுகாண்
பரைத்திடும் மஞ்சணத்தார்க்குரைத்ததே.

புரட்டாசிமாதம்.

தேயுமோ புரட்டாசிமாதந்தனில்
ஏயுமாளியெழில்பெறக் கட்டிடல்
மாயுநோயும் மகாரோகமெய்திடும்
தாயுமேயன்றயவா யுரைத்ததே. 214

ஐப்பசி மாதம்.

காணுமைப்பசி கனத்தமாளிகட்டிடில்
ஆணுபெண்ணு மரியகலைகளாம்
பூணுமாடை புசனுமாபரணமும்
வேணுஞ்சேதம் விளையுமெனமேனுமே. 215

கார்த்திகை மாதம்.

கனத்தமாரி கழருங்கார்த்திகையில்
தனத்தமாளிகை கலைமையாயகட்டிடல்
அனத்தம்வாரா தொருநாளுமாதர்க்கு
நினைந்தலட்சுமி நெருங்குமவாசமே. 216

மார்கழி மாதம்.

சொல்லுமே திருவாதிரைமார்கழி
புல்லுமாளி புகழவேகட்டிடல்
கொல்லுமேயது குவலயத்தனிலே
வெல்லுமயனார் விரும்பியுரைத்ததே. 217

தை மாதம்.

திரணம்வீசும் திளர்க்குந்தைமாதத்தில்
பூரணமாக முழுமாளிகட்டிடல்
மாரணமேதரு மக்களிபயமுண்டாம்
சாரணம்பணித் துடிப்பதுகலைமையே. 218

மாசி மாதம்.

அருமையாக வருதிறன்சிறப்பால்
பெருமையாம்மாசி பிலக்கமாளிகட்டிடில்
சிறுமைநீங்கிச் சிறக்குஞ்செல்வங்களாம்
ஒருமையா யுரைக்குமய னாலே. 219

பங்குனி மாதம்.

வெள்ளமேயபங்குனிமாதம் கட்டிடில்
உள்ளரத்த முறையுமாபரணமும்
தெள்ளுமட்ட சிறந்ததோர்செல்வமும்
கொள்ளைபோமெனக் கூறுவர்சிற்பரே. 220

குடிபோகும் மாதபலன் வேறு.

ஆடித்திங்களிராவணன் பட்டதாம்
ஆய்ந்தேபெரும் பாரதமார்கழி

வீடித்தேபுரட் டாசிரணியன்
வேதத்தோன் முடியற்றதுபங்குனி 221

காடித்தேயில் நன்மைக்கேகிடில்
காட்டில்மாந்தர்கள் நாசமடைகுவார்
ஓடித்தேசங்குடி பேரிப்போனாலும்
ஓட்டிலேயிரந் துன்னலாகுமே.

சித்திரைமாதம் வீடுகட்டினால்தனஆனி
வைகாசிமாதங்கட்டினால் ஜெயப்பிரதம்
ஆனிமாதம்கட்டினால் மிருத்துவுபயம்
ஆடிமாதம்கட்டினால் பசுக்கள்நஷ்டம்
ஆவணிமாதங்கட்டினால் பந்துவர்க்கம்வரவு
புரட்டாசிமாதங் கட்டினால்ரோகம்
ஐப்பசிமாதங் கட்டினால்கலகம்
கார்த்திகைமாதங்கட்டினால் இலட்சுமிவாசம்
மார்கழிமாதங் கட்டினால்பயம்
தைமாதங்கட்டினால் அக்கினிபயம்
மாசிமாதத்தில்கட்டினால் பாக்கியமுண்டாம்
பங்குனிமாதத்தில்கட்டினால் இரத்தினபாரணங்கள்நாசம்.

இராசி பலன்.

சொல்லுமேஷம் சுப்பிரத்தங்களாம்
வெல்லும்ரிஷபம் வேண்டும்தனலாபம்
புல்லுமிதுனம் புகலும்பசுவிருத்தி
கொல்லுங்கடகங் குறிக்குஞ்சமனத்தே. 222

அறையுஞ்சிங்க மருமம்பந்துசேர்தலாம்
நரையுங்கன்னி நெருங்குமகாரோகம்
இறையுமேதுலை மேருஞ்சௌக்கியம்
நறையும்விருச்சிகம் நாட்டுமோக்ஷபலம். 223

கலியுந்தனுசு நலிவேர்த்தவானி
வலியுமகரம் வருக்கசந்தானவிர்த்தி
கொலியுங்கும்பம புகலும்ரத்னலாபம்
ஒலியுமீனமு மோங்குபயமதே. 224

கண்டுமேராசி காசினிடமானிடர்
விண்டுமேசிற்பி விளம்புமவாக்கியமதை
கொண்டுமேராசிக் குறிப்பின்பிரகாரம்
மீண்டிடாமல் முடிப்பது திண்ணமே.

| | |
|---|---|
| மேஷத்தில் | சுபப்பிரசம் |
| ரிஷபத்தில் | தனலாபம் |
| மிதுனத்தில் | பசுவிர்த்தி |
| கடகத்தில் | லாபம்-நஷ்டமாம் |

| | |
|---|---|
| சிங்கத்தில் | பந்துசேர்தல் |
| கன்னியில் | ரோகம் |
| துலாத்தில் | சௌக்கியம் |
| விருச்சிகத்தில் | அர்த்தவிருத்தி |
| தனுசில் | அர்த்தஆனி |
| மகரம் | தானியவிர்த்தி |
| கும்பத்தில | இரத்னலாபம் |
| மீனம் | பயம் |

இவைகளைக்கண்டு வீடுகட்ட ஆரம்பஞ்செய்யவேண்டிய திதிபலன்

வேறு.

நெறியஞ்சுக்கிலபட்சமது நேருசப்பிரதமாதம்
செரியுங்கிருஷ்ணபட்சமது சிந்தவிராவிபோனதின்பின்
பெருகுந்திரிதைமுதலாய் பேசும்பௌர்ணமிதொடங்கி
உருகுஞ்சத்தமிதவ்வதாக்கு மோங்குஞ்சுக்கிலபக்ஷமதே.

கலிவிருத்தம்.

மற்றநாள் கிருஷ்ண பட்சமுதலாகா
உற்றபிரதமை யோங்குசஷ்டிகளும்
முற்றுமேகாதசியிது கணைத்தை
பெற்றதிதிபலன் போர்த்தவாணியே. 227

வாரிட்டார்விதியை சத்தமிகளும்
ஓரிட்டுதுவாதசி பத்தமைதிதி
சேரிட்டதிதியும் பலன்பக்தனம்
கூறிட்டமயன் குறித்த துவுண்மையே. 228

தக்கவட்டமி தாக்குந்திரிதிகை
பக்கமேதிரை யோதசிதன்முதல்
மக்கண்சேய தரிபாமிவை
சிக்குஞ்சுபமெனச் செய்தனர்சிற்பரே. 229

சீர்பெருஞ்சவுத்தி நவமிகளு
தார்சொரியுஞ் சதுர்த்தசிதன்முதல்
ஏர்பெருமருக்கத்தி யின்பலன்
போர்செறிமிருத்து வின்பயமதே. 230

சொல்லும்பஞ்சமி தோற்றிந்தாமிதான்
வெல்லும்பௌர்ணமி வேண்டும்பூரணதிதி
புல்லுமிதின்பலன் போற்றும்செயப்பிரதம்
அல்லுமலாசியத்தவாணியே.

சுக்கிலபட்சம் சுப்பிரத கிருஷ்ணபட்சம் அமாவாசிபோன திரிதிகைமுதல் பௌர்ணமிபோன சத்தமி வரையில் சுக்கிலபட்சமாகும் மற்றநாள்கள் கிருஷ்ணபட்சமாகாது பிரதமை சஷ்டி ஏகாதசி இவைகள் நந்தைதிதி இதன்பலன் அர்த்த ஆனி விதியை சத்து

மி துவாதசி இதன் பத்திரைதிதி இதின் பலம் பத்தனை திரிதிகை அஷ்ட மி திரயோதசி இது ஜெயாதிதி நீ இதன்பலன் சுபம் சதுர்த்தி நவமி சதுர்த்தசி இவைகள் ரிக்தைதிதி இதன்பலன் மிருத்து விண் பம் பஞ்சமி பௌர்ணமி இவைபூர்ணதிதி இதன்பலன் ஜெயப்பிராப் தம் அமாவாசியில் அர்த்த ஆனி இதன்பலன் பிராண ஆனி.

வாரபலன்.

இனியவார மெழுதிலெழுஞாயிறு
தனிசெவ்வாய் தனிலக்கினிபயம்
குனியதிங்களும் கூறிடுஞ்சமம்
துனிவுடன்மையன் சொன்னதமில்லையே.

உண்மையாம்புதனுக் குரைக்கும்வியாழமும்
தன்மையாம்வெள்ளி தாக்குஞ்சுபாசுபம்
உண்மையாஞ்சனி வாரசோபயம்
வண்மைவாரமறிந்து மாடங்கட்டே. 233

ஞாயிறு செவ்வாய் அக்கினிபயம் திங்கள் வரவு புதன் வியா ழம் வெள்ளி சுபம் சனிசோரபயம் இவ்வாறு பலனறிந்து வீடு கட்டவேண்டும்.

நட்சத்திரபலன்.

ஓதுமஸ்தமுறையும் ரோகணியும்
நீதியாயவிட்டஞ் சதயங்களும
கோதிலாமிருகசிரம் பூசமும
தீதிலாதிருவோணமு நன்மையே

நன்மையாஞ்சுவாதிய னுஷ்டானமும்
துன்மையிலாத்துடர்ந்த சித்திரையும்
வன்மைரேவதில் குறுருத்திரட்டாதி
பண்மையுத்திரடம் பார்க்கசுபமிதே

பார்க்கவுத்திரம் பகருநட்சத்திர
ஏற்கவேபதினன்கு சுபந்தரும்
தீர்க்கமாய்சிற்பநூலைத் திரட்டிட்டே
மார்க்கமாகமயமத சொன்னதே.

மிருகசிரம் ரோகணி அவிட்டம் சதையம் திருவோணம் பூசம் உத்திரம் அஸ்தம் சித்திரை அநுஷம் உத்திரட்டாதி ரேவதி இப்பவும் நான்குஞ்சுபம்.

யோகபலன்.

தங்குமேசுந்தர்க்கும் பிரமமுடன்
பொங்குமந்திரம்போற்றி நற்சாத்திரப்
எங்குமேசிவமே தருஞ்சுப்பிரமாம்
அங்கமாயிதமான சௌபாக்கியம்.

காணுந்துருவங் கழறுவைதிருதியாம்
வேணுஞ்சோபனம் விரும்புசுகமதாம்
தோணும்பிரிதியுந் தோற்றஞ்சித்தங்களும்
பூணுமியோகம் புகலும்பதினென்கே. 238

மாணுவியாகாதம்வழுத்துங் கண்டங்களாம்
கோணுசூலங்குறிக்கும் விஷ்கம்பமாம்
ஓதும்வச்சிரமோங்கு மதிகண்டமாம்
நீதியாம்வதிபாதம் பொல்லாதிதே. 239

பொல்லாதையா புகலும்பரிகமாம்
நல்லாவைதிருதியிந்த போகங்களும்
பொல்லாப்பென்று புகலுவர்சிறபர்கள்
பல்லபெயாண்பதும் போற்றும்பொல்லாதிதே. 240

சுபம் பிரதம் ஐந்திரம் சாத்திய சிவம் சுப்பிரம்சௌபாக்கியம் ஆயுசுமானதி துருவம் சுவர்மம் சோபனம் பிரிதிசித்தம் இப் பதினொன்று சுபம்.

வியாகாதம் கண்டம் அதிகண்டம் விஷ்கம்பம் சூலம் வச்சிரம் விதிகபாதம் வைதிருதி பரிகம் இந்தயோகம் 9-ம் ஆகாது.

கரணபலன்.

பண்ணும்பாலவம் பகரும்பவமுடன்
அண்ணலாருமை யறையுங்கௌலவம்
எண்ணும்வித்துலா மேற்குங்கரசியாம்
கண்ணும்பத்திரை நற்சுபமியுமே. 241

உய்யுந்நாகமு மோங்குஞ்சகுனியாம்
மையசதுஷ்பாதம் பகருவணசையும்
மெய்யவேகிமஸ்துக் கினமைந்தும்
பொய்யக்கரணம் புகலப்பல்லாதிதே.

பலம் பாலவம் கௌலவம் தைதூலகாசைபுத்திரை இக்கரணம் 6-ம்-சுபம்.

சகுனி நாகவம் சதுர்பாதம் கிமஸ்துக்ன மவணசை இந்தக் கிரணம் 3-ம் ஆகாது.

சூரிய ஜாமம்.

கூறும்பரணிகுறிக்கும் ரண்டசம்பாதம்
வீறுங்கார்த்திகை விளம்புநாலம்பாதம்
கோறும்ரோகணி குறுக்குமுதற்பாதம்
மாறுமேழிலம் வருக்கும்பரிதியே. 242

பரிதியின்றபகர்மானி கட்டுடில்
குருதியக்குங்கொடிய பயன்கொலு
பருதிபேல்பயன் பக்குமசாத்திரம்
திருமாந்தர்க்குரோ யுரைத்ததே. 243

பரணி இரண்டு பாதமும் கார்த்திகை நான்கு பாதமும் ரோகணி முதற் பாதமும் இந்தப்பாதம் ஏழிலும் சூரியனிருக்க வீடுகட்டினால் அக்கினிபயம்.

குருசாரம்.

வசப்பிடும்மதிசிறந்ததார் கார்த்திகை
ஒப்பிடும்பூச மோகுமகமுடன்
வெப்பும்பூரமும் விளங்கிடுமஸ்தமும்
தப்புலாரேவதிமூலம் பொல்லாததே.
சொல்லாதையா புகலுங்குருமொழி
கொல்லுமநட்சத்திர பலனேழிலும்
வெலுமங்காரகனிருக்க மாளிகட்டிடில்
புல்லும்புத்ரர் புகலவாணியதே.

கார்த்திகை பூசம் மகம் பூரம் அஸ்தம் மூலம் ரேவதி இந்த நட்சத்திரமேழிலும் அங்காரகனிருக்க வீடுகட்டினால் புத்திரஹானி

இதற்கு தோஷபரிகாரம்.

வஞ்சிகேளும் வழங்குமகரமீனங்
மிஞ்சுமகரமேவுங் கடகமும்
செஞ்சுமேபூரண செயராசியாம்
கஞ்சமயனுர்கழரு நூல்பொய்யாதே.
வகுத்திடும் துலாம் வழங்கும்விரிச்சிகம்
தொகுத்திடுமேஷந் தோஷந் துமிகடாநம்
பகுத்திடுஞ்சலராசி யெனலாம்
நிகழ்த்துமயனுர் நோயுரைத்ததே.
காரிற்கும்பம் பகுக்கும்ரிஷபமாம்
சோசிம்பஞ்சிக்க விறைநளும்
சீருமர்த்தசவராசி யென்னலாம்
பேரமயனுர் பேணியுரைத்ததே.
பாரெலாங்கன்னி பகருமிதுனமாம்
யேருதனுசு யேற்கவிவைமூன்றும்
காற்விறச்சலராசி யெனப்படும்
சீரும்பூரணச் சேர்கலராசியே.
யேந்துமிந்தவெழில் பெறும்ராசியில்
போந்தமாளிபுகல வமைத்திடல்
வேந்தமனுத்த மானராசிதனில்
கூந்தல்வேலுன் குருசுக்கிரனுமே.
ஆமேசந்திரனைறயும் பார்வைதனில்
தாமேமாடந் தனிமாககட்டிடில்
போமேமங்காரதோஷம் பொலிவில்லை
னாமேசிற்பநூல் நவிலவுரைத்ததே.

மீனம்-கடகம்-மகரம்-சம்பூர்ணசலராசி
விருச்சிகம்-துலாம்-மேஷம்-பாதசலராசி
கும்பம்-ரிஷபம்-சிங்கம்-இவைகள்-அர்த்தசலராசி

கன்னி மிதுனம் தனுசு நிறைசலராசி பூரணசலராசியில் வீடு கட்டினாலும் உத்தமமான நட்சத்திரத்தில் சந்திரன்குரு சுக்கிரன் பார்வையில் கட்டினாலும் அங்காரகதோஷந் தேவையில்லை.

புதன் பலன்.

பொன்னுமஸ்தம் புகலுமசுவனி
மன்னுமுத்திரமா மிருகசிரம்
வினலுமரோகணி விளங்கிடுஞ்சித்திரை
துன்னுமாறுந் தொகுப்பாயுரைத்ததே
உரைத்திடும்பதி யோங்கும்புதனிருந்
திரைத்திடுங்கணத் தினிலெதனிலாதது
குரைத்திடும்பதி யுச்சத்திலாவது
முரைத்திடாமானி கட்டிடுவதாட்சியே
ஆட்சியன்றியணி பெரும்புத்திரர்
மாட்சிமேவும் திகமாமன்னவர்
காட்டியாவுங்களித் திடுமிப்பலன்
தாட்சியின்றி தனியவுரைந்ததே.

அசுவனி மிருகசிரம் அஸ்தம் உத்திரம் சித்திரை ரோகணி இவ்வாறு நட்சத்திரத்தில் புதனிருந்தாலும் லக்கினத்திலாவது உச்சத்திலாவது வீடுகட்ட ஆரம்பஞ்செய்தால் புத்திரசம்பத்துடன் சுகமாயிருப்பார்கள்.

ஆயவுத்திர மானதிருவோணம்
தூயவுத்திராட மேற்குமரோகணி
எயபூராட மேற்குமரோகணி
காயமிருகசீ கழறும்பூசமதே
பூசமேவும் புகலிமாயிலியம்
வாசம்வீரம் வகுக்குமுத்திரம்
நாசஞ்செய்யு நவிலவொன்பதுவும்
நேசஞ்செய்யா நெருக்கும்பலமதே
செல்லவுத்திரஞ் செழிக்கக்கருதிற்கில்
வல்லக்கினம் வழங்குமுச்சத்திலும்
செல்வமாளி சிறக்கவேகட்டினல்
நல்லலட்சுமி நடுவிலும்வாசமதே.

திருவோணம் உத்திராடம்உத்திரட்டாதி பூராடம்மிருகசிரம் ஆயிலியம்ரோகணிபூசம் இந்த 9-நட்சத்திரத்திலே குருவிருக்கஅல்லது லக்கினத்திலாகிலும் உச்சத்திலாகிலும் இருக்கவீடுகட்டினலும் ஆரம்பஞ்செய்தாலும் இலட்சுமி கடாட்சமுண்டாகும்.

நன்னுக்கேட்டை நவிலும்புனர்பூசம்
ஒன்னுஞ்சித்திரை யோங்குமசுவனி
துன்னமேவும் வருக்கும்பூராடமாம்
அன்னவாருரை பறையுமவிட்டமே

மேவிடும்மனுஷம் விசாகத்துடன்
தாவுமேதிருவாதிரை தன்றுடன்
மேவுஞ்சதயம் விளம்புறுபத்திலும்
தூவுசுக்கிரன் றோன்றலுநன்மையே

நன்மையம்பதி நவிலும்சுக்கிரனும்
வண்மையாக வலுத்துமேநின்றிடில்
பண்மையாயாளி புகலவேகட்டிடில்
துன்மைநீக்கிச் சுகந்தருமுண்மையே.

கேட்டை புநர்பூசம் சித்திரை அசுவனி பூராடம் அவிட்டம் அநுஷம் விசாகம் திருவாதிரை சதயம் இந்த பத்துநட்சத்திரத்திலும் சுக்கிரனிருக்க வீடுகட்டினுலும் ஆரம்பித்தாலும்சுபம்நன்மையைத் தரும்.

சனிசார பலன்.

வருஞ்சதயம் வருக்கும்பூரட்டாதி
இருஞ்சுவாதி யெழிலுத்திரட்டாதி
ஒருப்பரணியா மோங்குமவிட்டமும்
தருவனுஷமுந் தாக்குங்கேட்டையிதே

இந்தநட்சத்திர பலனெட்டிலும்
தொந்தமேவுஞ் சொட்டுருஞ்சனிநிற்கில்
அந்தமாகவறை மாகட்டிடில்
பந்தமற்றுப்போய் பாழுமடைவிதே

அடையும்பூத மறையுமாளிகளில்
படையுமற்றுப் பகருமூதேவியாள்
அடையுமேபிரம்ம ராட்சசனைப்போது
இடையுஞ்சீதேவி யெழில்வாக்குதப்பாதே.

சதயம் பூரட்டாதி சுவாதி உத்திரட்டாதி பரணி அவிட்டம் அனுஷம் கேட்டை இந்த 8-நட்சத்திரத்திலும் சனியிருக்க வீடுகட்டினுலும் ஆரம்பித்தாலும் பேய் பிரமராட்சதாள் வாசஞ்செய்வார்கள்.

இராகு சாரபலன்.

சொல்லுமேவுந்தொடரு மிராகுதான்
வெல்லுமைத்தின மேதமெதிர்சாரம்
புல்லுமேபதி னுன்குநட்சத்திரம்
கொல்லுமிருத்துவ சாரம்பொல்லாததே

பொல்லாதை புகலுமந்தசாரம்
நல்லமாளிகை நவிலமமைத்திடில்
சொல்லவொண்ணுமல் தோற்றிடுந்தான்பம்
அல்லும்பகலு மறையவொண்ணுதிதே.

இராகிருந்த லக்கினத்திற்கு எதிர்சாரம் கஉ-நட்சத்திரமும்பிருது வும் சாரமானபடியால் அந்தசாரத்தில் வீடுகட்ட ஆரம்பஞ்செய்ய லாகாது.

பிரகஸ்பதி சுக்கிரனஸ்தமானபலன்.

கூறுடன்சுக்கிரன் குருதன்முதல்
வீறுமஸ்தமான போதுகன்னிலும்
கூறுமேவுங் குறுக்குநீசத்திலும்
தூறுமேபகை தோன்றலுமுண்மையே. ௨௬௭

உண்மையாக வுரையுஞ்சேத்திரபதி
தண்மையாம்சத்து ருக்களிருக்கினும்
உண்மையாய்மாளி வகுக்கவேயாகாது
கண்மையாமாயன் கண்டுவுரைத்ததே. ௨௬௮

கூறுமாளி குறிக்குமதிகாரம்
தூறுமெத்த துரைசாதியானாலும்
சேருமந்த சிரத்திடுஞ்சாதிக்கு
கோருங்கிரகங் குறிக்குப்பொல்லாதிதே. ௨௬௯

குறிக்கச்சத்துரு கூடவிருக்கினும்
தெறிக்கவேதிக னஸ்தமானபோதும்
முறிக்கநீச்ச முடிவுகாலத்திலும்
மறிக்கமாளி யமைப்பதுண்மையே. ௨௭௰

கூறுந்தான்பங் குறிக்குமனிதர்க்கு
நேருஞ்சங்கற்ப நிகழுமெக்காலமும்
கூறுமன்னியர் கூட்டமிட்டேவந்து
பருமக்கிரம மாகக்கொள்வார்களே. ௨௭௧

குரு-சுக்கிரன் அஸ்தமானாலும் நீச்சத் தானத்திலாகிலும் பகை க்ஷேத்திரத்திலாகிலும் சத்துருக்களுடன் கூடினாலும் வீடுகட்டலா காது வீட்டுக்குக்கர்த்தன் எவ்விதசாதியானாலும் அந்த ஜாதிகளுக் குரியகிரகம் சத்துருக்களுடன் கூடினாலும் அஸ்தமானாலும் நீச்சத் தானத்திலிருந்தாலும் வீடுகட்டினால் அன்னியர் அபகரித்துக்கொள் வார்கள்.

ஸ்திரலக்கின ராசிகளின்பலன்.

பாலசிங்கம் பகரும்ரிஷபமாம்
ஞாலகும்பம் நவிலும்விருச்சிகம்
கோலமாமிந்த குறிக்கும்க்ஷேத்திரங்கள்
ஏலவேநன்மை யெழிலுத்தமாகுமே. ௨௭௨

## கிராமக்ஷேத்திர நிர்ணயாகாரக்ஷேத்திர சொருபலக்ஷணம்.

சொல்லுங்கக்கிரி தோன்றுபோலவும்
வெல்லுமுக்கோணம் விளம்பியபோலவும்
புல்லும்நேத்திரம் புகன்றனபோலவும்
கல்லுமேதலை கருதியபோலவே ௨௱௫

போலமத்தளம் புகவடைக்காய்போல
ஆனவுள்ளு மரியபுறம்புமாம்
சோலமான குவலயத்தன்னிலே
ஏலமாளி யியம்பவொன்றுதே. ௨௱௬

சேருமும்பு சிறங்குகிராமத்தில்
நேருமத்தியம் நெருங்குமூலையிலும்
பாரும்பள்ளம் பகர்நிலமாகிலும்
ஊருந்தண்ணீர யோடுநிலமதே. ௨௱௭

வரவுசொல்லும் வருக்கும்பலபேர்கள்
திரமுடன்கூடா தென்றநிலத்திலும்
உரையுங்கோபுர முற்றநிலத்திலும்
திரையுமரவஞ் சேர்ந்தபுத்துமிதோ ௨௱௮

புத்துடன்பெரும் பத்துவாய்சீறிய
சத்துமேவுஞ் சதாநிலமாகிலும்
தொத்துமேவு சடலைப்பதியிலும்
கத்துமாடுகள் கழலுமாதையதே. ௨௱௯

சேதமேற்றுச் சிறந்தகிழக்குடன்
நீதிபரமனை நிறைதப்பிருந்தாலும்
போதமேசலம் புகழ்நெருக்காகிலும்
வேதமோத விளங்கிடுகெய்யதே. ௨௱௰

நெய்யுடன்றயிர் கரும்புத்தேனுடன்
கொய்யுமெண்ணெய் குழிக்குமுதிரமும்
வையமச்சம் பகருந்தரையுடன்
வெய்யபட்டி ருக்கைபோல்தாதிதே. ௨௱௰௧

பொல்லாநித்த புகலும்வழிமுறை
வல்லாண்மைகண் டறிந்திவையெலாம்
எல்லாமுணர்ந்த சிற்பநூற்பண்டிதர்
நல்லாய்சிறந்தநூல் காட்டிமெய்தானிதே. ௨௱௰௨

கத்தரிக்கோல்போலும் முன்றுமூலைபோலும்நேத்திரம்போலு ம்தலைபோலும் மத்தளம்போலும் கொட்டைப்பாக்குபோலும் உள் ளும்புறம்புமா யிருக்கப்பட்டபூமியிலும் உடம்புநிலகிராமத்திலும் அல் லது அதற்கு மூலையிலும் பள்ளநிலத்திலும் தண்ணீர் ஓடுகிற நிலத்தி லும் பலர்கூடாதென்று தடுக்கும் நிலத்திலும் கோயில் நிலத்திலும் புற்றிருந்த நிலத்திலும் சுடுகாட்டு நிலத்தில் வீடு கட்டப்பட்ட

நிலத்திலும் கிழக்கு மேற்கு அகலங்குறைந்த நிலத்திலும் தண்ணீர் சமீபித்தநிலத்திலும் தேன் நெய் தயிர் எண்ணெய் உதிரம் மீன் சவம் பட்சி இவைகள் வாசனைபொருந்திய நிலத்திலும் வீடுகட்டலாகாது கட்டினால் பலவித துன்பமுண்டாகும்.

பூமியைச்சோதித்து வீடுகட்டும் விபரம்.

கூறும்பூமி குறிக்கும்வெள்ளையுடன்
வீறுத்தித்திப்பு விரும்புங்குரியுடன்
பேருந்தாமரை பொருந்தபூவாசனை
ஏரும்பூமி யிருக்கமிக்கநன்றே. ௨௬௨

நன்றுமாரியா நவில்மாளிகட்டிடில்
குன்றுதென்னுருங் கூறக்குடும்பமும்
நன்றுயோங்கும் நலம்பெறுநற்சுபம்
வன்றுமரையாள் வருக்கும்வாசமதே. ௨௬௩

ஓதும்பூமி யுயர்ந்தசிவப்புமாய்
நாளாசந்துவர் கருதியபூமியும்
ஏறலாம்பரி யெழில்மணம்போலவும்
பூதலத்தில் புகழ்மாளிகட்டவே. ௨௬௪

கட்டினால்மாளி காசினிராஜர்கள்
பட்டினம்வாழ் பகரும்குபேரன்போல்
கட்டடங்கி காட்சிமிகப்பெற்று
அட்டியில்லா தருமையாய்வாழ்வரே. ௨௬௫

வெளுத்தபூமி தித்திப்பானபூமி தாமரைப்பூவாசனையுள்ள பூமி இவைகளில் அரசர்கள் வீடுகட்டினால் உத்தமம்.

சிவந்தபூமி துவப்புள்ளபூமி குதிரைவாசனையுள்ளபூமி இவைகளில் அரசர்கள் வீடுகட்டினால் உத்தமம்.

கருத்தபூமி கசப்புசாரமுள்ளபூமி தானிய வாசனையுள்ள பூமி இவைகளில் சூத்திரர் வீடுகட்ட உத்தமம்.

பச்சைபூமி புளி உப்புபொருந்தியபூமி இவைகளில் சங்கமசாதிகள் வீடுகட்ட உத்தமம்.

நீங்காதமதுரமும் பரிமளமும்பொருந்திய பூமியில்சகல சாதிகளும் வீடுகட்ட உத்தமம்.

க்ஷேத்திர ஆருடம்.

இந்தத்திக்கில் வீடுகட்டினால் நல்லதாவென்றுகேட்கும்போது அந்தத்திக்கிலிருப்பவர்க்கு எதுவோ அந்தக்கணக்கை வலப்பக்கத்தில்வைத்து சர்க்கரைமாதி அசரவாக்குக்கும் இதுவே அந்தக்கணக்கு இடப்பக்கத்திலவைத்து எட்டுபேருக்குக்கொடுக்க மிகுந்தது கணம் முன்வலப்பக்கத்திலிருந்து கணக்கு இடப்பக்கத்தில் எட்டுபேருக்குக்கொடுக்க மிகுந்தது குணம் - தனம் - அதிகமாயிருந்து

குணம் குறைவாயிருந்தால் நல்லது குணமதிகமாயிருந்து தவம் குறைவாயிருந்தால் நல்லதல்ல தனமும் குணமும் சரியாயிருந்தால் ஆதாயமும் விரையமும் சரியாயிருக்கும்.

கோளச்சக்கரநிலை.

ஈசான்யமுதல் மீனம்-ஆதிபாய்வைத்து-௰௨-ராசியும் இந்தசக்கரத்தை பிரதட்சணமயெழுதி கர்த்தன்ராசிக்கு விடப்படுகிற விடத்தை எண்ணிக்கொண்டுவரும் சக்கரமாகையால் கர்த்தன் நாலாம் ராசியிலும் ஐந்தாம்ராசியிலும் விடுகட்டினல் பந்துக்களை போஷிப்பானவன்ராசிக்கு-௩-௭-௧௧-இந்தராசியில் விடுகட்டினல் அன்னியரைபோஷிப்பான்-௨-௬-௰-இராசியில் விடுகட்டினல் நாசமாம்.

| மீனம் | மேஷம் | ரிஷபம் | மிதுனம் |
|---|---|---|---|
| கும்பம் | கோளச்சக்கரம் மீனமுதல் | | கடகம் |
| மகரம் | வைத்துப்பார்க்கவும். | | சிங்கம் |
| தனுசு | விருச்சிகம் | துலாம் | கன்னி |

குழிகெல்லி மண்ணெடுத்துப் பார்க்குமிலட்சணம்.

வீட்டுக்கர்த்தாவானவன் தன்முழத்தால் ஒருமுழ அகல நீளம் ஒருமுழம்ஆழம் நான்குபக்கமும் கீழ்ஆழமும் சரியாய்ப் பார்த்து பள்ளமெடுத்து மறுபடியும் அந்தமண்ணை அப்பள்ளத்தில் நிறப்பிப் பார்க்கும்போது மண்மிகுந்தால்சுபம் சரியாயிருந்தால்சமமாயிருக்கும் குறைவாயிருக்குமாகில் தரித்திரம் இதன்றிசூரியன் அஸ்தமானமாயிருக்கும்போது மேற்படி பள்ளத்திலிருக்கில் மண்ணையெடுத்துப்போட்டு அதில்நிரம்பத் தண்ணீர்விட்டு மறுநாள் உதயத்தில் பார்க்கும்போது தண்ணீரிருந்தாலும் சேருயிருந்தாலும்சுபம் அந்தப்பள்ளத்தில் தண்ணியில்லாமற்போனலும் சேர்இல்லாமற் போனலும் ஒக்கப்பூச்சிஒடியிருந்தாலும் ஆகாது மேற்சொல்லிய குழிகள் தண்ணீரும்பாலும் வார்த்தபோது பிரதட்சணமாகச் சுற்றினல் நன்மை.

கயிறுபிடித்தளக்குமிலட்சணம்.

பிராமணன்-க்ஷத்திரியர் பூமிமுதல்முழங்காலூற்றெட்டு நக்கவேண்டும் மறுபடியும் பிராமணன் தெற்பையால்தொட்டு நக்கவே

ண்டும் வைசியனும் சூத்திரனும் திரிக்கபுண்டநூல்நக்கவேண்டும்
க்ஷத்திரியர் தேங்காய்கயிற்றினால் நக்கவேண்டும் வைசியர்பனைநார்
கயிற்றினால் நக்கவேண்டும் சூத்திரர் நூற்கயிற்றினால் முப்புரிபோ
ட்டு அதனால்நக்கவேண்டும் இந்தக்கயிற்றினால் கோயில்களுக்கும்
பிராமணாள்வீட்டுக்கும் க்ஷத்திரியர்வீட்டுக்கும் அளக்கலாம் பின்பு
இரட்டைபுரிநூற்கயிற்றினால் வைசியர்சூத்திரர் இவர்கள்வீட்டுக்கும்
அளக்களாம் இந்தக்கயிறு பிடித்தளக்கும்போது எந்தசீவன் தாண்டு
கிறதோ அந்தசாதி எலும்புஅகப்படும் அதையெடுத்துப் போட்டு
விடவும் மேற்படி கயிற்றினால் அளக்கும்போது கோழிதாண்டினால்
பக்ஷிஎலும்பு கீழ்மூலைபாரிசத்திலிருக்கும் பூனைதாண்டினால் அதினெ
லும்பு முயமலெலும்பு ஈசானியத்திலிருக்கும் பசுதாண்டினால் அத
னெலும்பு வருணன்மூலையிலிருக்கும் கழுதைதாண்டினால் அதனெ
லும்பு வாய்வுமூலையிலிருக்கும் குதிரைதாண்டினால் அதனெலும்பு
வடக்குமூலையிலிருக்கும் ஒருமனிதன் மண்ணைதேய்த்துக் கொண்டு
எந்தமூலையில்நின்று பார்க்கிறானோ அந்ததிக்கில் ௭௩ - அங்குலம்
ஆழப்பள்ளமெடுத்துப் பார்த்தால் மனிதனெலும்புயிருக்கும் பயித்
தியம்பிடித்தவன் எந்தமூலையைப் பார்க்கிறானோ அந்தமூலையில் அங்
குலந்தோண்டிப் பார்த்தால் மனிதனெலும்பு அகப்படும் இந்தப்
படி பூமியைச்சோதித்து வீடுகட்டவேண்டும்.

## மனையில் எலும்பிருக்கும் குணலட்சணம்.

வீடுகட்டும்போது பூமியை சோதனைசெய்யாமல் வீடுகட்டின
பலன்யாதெனில் பசுவிருந்துபாலில்லாமலிருந்தால் குழந்தை எலு
ம்பு கிழக்கண்டையிருக்கும் பசுக்களிருந்தும் பால்கறவாது துறைத்
தனத்தார் கோபமுண்டாயிருந்தால் குதிரைஎலும்பு அக்கினிமூலை
யிலிருக்கும் ஆகிலும் எந்நாளும்யோகமுண்டாம் யானையெலும்பு
தென்னண்டையிருந்தால் யென்னாளும் சொணக்காரனாயிருந்து
துக்கப்படுவன் பன்றியெலும்பு நிருதிமூலையிலிருந்தால் என்றைக்
கும் அவமிருந்து தோஷம்வந்தடையும் எருதெலும்பு மேற்கேயிரு
ந்தால் என்றைக்கும் ஆருடஞ்சொல்லுவார் பின்னும் போக்குவந்த
துசொல்லுவார் கழுதையெலும்பிருந்தால் என்றைக்கும் அர்த்த
நாசமாயிருக்கும் ஆட்டெலும்பு வடக்கேயிருந்தால் அன்டை அய
லார் என்றைக்கும் சண்டையாயிருப்பார் ஈசானியத்தில்நாயெலும்
பிருந்தால் வீட்டிலெந்நாளும் கலகமாயிருக்கும்நடுவீட்டில்தலைமண்
டையோடிருந்தால் அவ்வீடுமனையை ஆறுசாணளவு மண்ணெடுத்து
சோதனைசெய்து வீடுகட்டினால் சுகமுண்டாகும் கோயில்கள் கட்ட
வேண்டுமானால் அந்தபூமியெவ்வளவோ அவ்வளவுவிஸ்தாரம் ஏழு
சாணாழம் மண்ணெடுத்துசோதித்து கட்டவேண்டும் வைசியனால்
௪-சாண் மண்ணெடுத்துக்கட்டவேண்டும் சூத்திரன் ௩-சாண் மண்
ணெடுத்துப் பார்த்துக் கட்டவேண்டும்

## சலதாரை லட்சணம்.

அண்டைவீட்டுத்தண்ணீர் தன்வீட்டுக்கு வரக்கூடாது நமது வீட்டுதண்ணீர் கிழக்கேபோனால் உத்தமம் அக்கினிமூலையிற போனால் எஜமானனுக்காகாது வாயுமூலைபோனால் பசுக்கள்நஷ்டமாகும் வடக்கேபோனால் தனமுண்டு ஈசானியமூலையிற்போனால்சுபகரமுண்டாகும் தன்வீட்டில்தானே தண்ணீரிருந்தால் நாசமாம்.

## புட்பங்கள்விடுவதற்கு லட்சணக்குறி.

தாழ்விலாமனையின்மீது சதுரமாமொருமுழக்குழி
லாழமுமகலங்கெல்லி பதனுணீர் பூவைவிட்டால்
வாழ்கதிரவனைநோக்கி வலம்புரிந்தோடில்வாழ்வார்
சூழ்கதிரிடமாய்ச்சுற்றி சொல்மனையெடுக்கத்தீதே.

இ-ள். மனைக்குநடுவில் நாற்சதுரமாய் ஒருமுழமளவுஆழமும் அகலமுங்கெல்லி அதில்தண்ணீர்விட்டு ஒருமலரைக்கையிலெடுத்து பரமசிவத்தைதியானித்து அதில்புரோட்சித்தால் அதுசூரியனைநோக்கி வலஞ்சுற்றிவரில் அதிகவாழ்வுஞ்சம்பத்தும் கீர்த்தியும் ராஜபிரதிஷ்டையும் வாதிகளும்அதிகரித்து சுபோட்சையுண்டாகும் அம்மலரானது இடப்புறஞ்சுற்றில் அம்மனையெடுக்கில் அதிகதுன்பங்களைவிளைவிப்பதுமன்றி எக்காலத்து மனவியாகூலமும்வராதஆபத்துக்களும் வருமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் எ-று.

## அஷ்டதிக்குலட்சணம்.

ஈசானியமூலைகன்னி விண்பமேயினிதுகொண்டு
வாசமாவதனினின்றால் வரிசையும்வாழ்வுமுண்டாம்
போசனம்பெரியோர்க்கெல்லாம் பொருந்தியமனிதனுவான்
வாசமின்குழலினாளே மயனுரைநூல்கண்டாளே.

இ-ள். ஈசான்யபக்கமென்று சொல்லப்படுகின்ற பரமசிவத்தினதுபக்கத்தில் பரிமளம்பொருந்திய மலரானதுவந்துநின்றால் தனைதஸ்வரியமுந் தீர்க்காயுசும்புத்திரசம்பத்தும்வாழ்வு மென்மேலும் விருத்தியாய்ப்பெருகி நீடூழிகாலநிலைநிற்கும் இதன்றி பெரியோர்களுக்குந் தபோதனர்களுக்கும் அன்னபானாதி கொடுக்க வல்லவனுயிருப்பான் எ-று.

இந்திரன்மூலைதன்னி லியப்புடன்கிழக்கில்நின்றால்
செந்திருவாசமாவாள் செம்பொன்னுஞ்சேருமின்ப
மைந்தரைப்பெறுவாழ்வார் வளர்தன்மகாவிசேஷமும்
முந்தவேமயனுர்சொன்ன முறைநூல்விதாகண்டாயே.

இ-ள். இந்திரன்திக்கில் பரிமளம்பொருந்திய மலரானதுவந்து நிற்குமாகில் லக்ஷிசவுந்தரியம்பொருந்திய லட்சுமிவிலாசமும் தனதான்யசம்பத்தும் சந்தான பாக்கியமும் தீர்க்காயுசும் ஆரோக்கியமும்

ரேவதி அஸ்தம் புனர்பூசம் சித்திரை சுவாதி அஸ்வனி மிரு கசிரிடம் அனுஷம் கேட்டை இந்நக்ஷத்திரம் கூடும் சுவர்வைக்க வும் யானை குதிரை ஆடுமாடு இவைகள் வாங்கவும் உத்தமம்.

அதோமுகநட்சத்திரத்தில் கிணறு குளம் ஏரி இவைகளெடுக்க லாம் விசாகம் மூலம் ஆயிலியம் கார்த்திகை பூரம் பூராடம் பூரட்

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | |
| | பேய்க்காவல். | தேவர்கள்காவல் | பேய்க்காவல். | |
| | தேவர்காவல். | பிரமஸ்தானம் | தேவர்காவல். | |
| | | நாலு அறையும் | | |
| | பேய்க்காவல். | தேவர்கள்காவல் | பேய்க்காவல். | |
| | | | | |

டாதி மகம் பரணி இந்த ௯-நட்சத்திரமும் அதோமுகமானதால் கிணறுகுளம் ஏரிக்கால் அகழி சுரங்கம் கணக்கு அப்பியாசகளஞ்சிய மிவைகள்செய்யலாம் தனம்புதைக்கலாம் சங்குஸ்தாபனம் பண்ணலாம் ஸ்தம்பப்பிரதிஷ்டைபண்ண முதற்சாமம் உத்தமம் இரண்டாஞ்சாமம் சந்தோஷம் மூன்றாஞ்சாமம் அதமம் நாலாஞ்சாமம் சந்தியாகாலம் இராக்காலங்களிலுங் கூடாது.

நாட்டுபுகழ்சேயனையதற்கு நலங்கொள்வெட்டறைசெய்து
மீட்டுநடுவில்நாலறையும் விரிந்தசனநாலுமேபாய்
ஈட்டுதிசைகளொருநான்கு மிருநான்கறையுமிறையவாதல்
காட்டுநாற்பத்தெட்டறையுங் குணமாய்க் கொள்வாய்கொம்பனே.

ஒருமனையில் அறுபத்துநான்கு பாகத்துக்குட்பட்டு வீடுகட்டுவதற்குலட்சணம்.

அகந்தனையெல்லைநான்கு மன்புடனளந்துக்கொண்டு
திகழ்தருமாறுபத்து நாலுடன்பாகஞ்செய்து
பகமேபிரமஸ்தான மத்தியிலொன்குபாகஞ்
சுகமுயர் திக்குநான்குந் துரிதருந்திரபாகந்தான்.

இ-ள். மனையை நான்குபாகமாக அளந்துக்கொண்டு அதை அறுபத்துநான்கு பங்காக்கி மத்தியில் நான்குபங்கு பிரமஸ்தானம் நான்குதிக்கும் உருத்திரபாகம்-எ-று. கக

மற்றதோர் திக்குநான்கும் வகையதுசொல்லக்கேளாய்
வித்தகனைவிஷ்ணுபாதமாய்விளம்பக்கேளு
சித்தமாங்குறைகளெல்லாந் தேவதைபாகமென்றும்
சுத்தமாந்தமிழையோதுஞ் சுகமயன்சொன்னவாறே.

இ-ள். திக்குகள்நான்கு விஷ்ணு பாகமும் மற்றதெல்லாம் தேவர்களதுபாகமென்று மயனென்பவா சகலருக்குந்தெளிவாகச் சொல்லியவாக்கியம்-எ-று. கரு

அண்டத்துக்கொத்தநேர்மை யருளியபிண்டமாகும்
பிண்டத்துக்கொத்தநேர்மை பெருகியகிரமமாகுங்
கொண்டமுனெத்திரமுநாசகூடியகரங்களோடு
விண்டுபருந்திசென்னி மேவிநற்கிரகமாமே.

இ-ள். அண்டத்துக்கொத்தபடி பிண்டம் பிண்டத்துக்கொத்தபடிவீடு கரசரணதிகளோடுங்கூடி விளங்கிய கிரகம்-எ-று. கசு

இந்தநல்விதமாய்ச்செய்தா லியல்புடன்வயதுமீருஞ்
செந்திருவென்னுமாது திகழ்பிரகாசமாவாள்
சந்ததிதின்றுகாலி தக்கதோசெயபொன்சேருஞ்
சுந்தரப்புகழுண்டென்று சோதித்துமயன்சொன்னனே.

இப்புவியின்மாதே யிருதான்விரேல்
செற்பக்கிரக கோலாம்.

வெணு.

இட்டவெட்டுடன் பன்னிரண்டாக்கமாம்
ஏற்குமொன்பதே[illegible]க்கழிவசா
மூட்டிமூன்றுடனெட்டுமே[illegible]வியாம்
மொழித்தவெட்டுடன்மூன்பாகுனதாய்
நட்டநான்குகுணமுப்பதியக்கமாம்
வளர்மொன்பதே[illegible]டமுங்கிழமையாம்
[illegible]ட்ட லேமுடனீராறு[illegible]யாம
மற்றவொன்பதுக்கல்கைகைருணமாம்
ஒட்டுநான்குடனொன்பது அங்கமாம்
ஒக்குமுமொன்பதெதாக்குகீறுயுளே.

மயன்சனற்குமாரவஸ்து கட்கவஸ்து வீமேசுரமாலை உள்ளமுடையான காஸ்யபிரதம் இவைகளும் சேவர்கள் அடி க-க்கு இப்பாது வழங்கிவரும் அங்குலம் ௯ச-என்றும் இரண்டேமுக்கால் வீசம் இரண்டேமுக்கால்வென்று மனைக்குரியவன் வீடுகட்டிறைல் தன்கைசாணென்றும் முழமென்றும் இவ்விதமாகப் பலவாறுகச் சொல்லியிருப்பதையோசிக்கில் ஒவ்வாமையால் இப்போது அரசரால் நியமிக்கப்பட்டு தேசங்கள்தோறும் மனைமுதலிய காணிகளுக்கு வழங்கிவருவது சாதி அடி ஆகையால் அதன் முதன்மையாக வைத்துக் கொண்டு மேற்படி மனையில் எவ்வளவு விஸ்தாரமுள்ள கட்டடங்கட்டவேண்டுமோ அந்தமனை கட்டடத்துக் குட்பட்ட அகலநீள அளவை கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு இவ்வளவென்று அளவிட்டு ஒன்றுக்கொன்று மாறியகுழித்தொகையை துருவபதமாக வைத்துக்கொண்டு அத்தொகையை எட்டுநீக்கி மீந்ததொகை மனைக்குகெற்பகர ஆய்கம்.

முதலாவது.

மனைக்குவந்த குழியை துருவமாக்கி எட்டிற் கழித்து கெற்பகர ஆய்கம்

இரண்டாவது.

௮-ல் பெருக்கி ௧௨-ல் கழித்து மிகுந்தசேடம் — ஆதாயம்

மூன்றாவது.

௯-ல் பெருக்கி ௰-ல் கழித்து மிகுந்தசேடம் — விஜயம்

நான்காவது.

௩-ல் பெருக்கி ௮-ல் கழித்துமிகுந்தசேடம் — யோனி

ஐந்தாவது.

௮-ல் பெருக்கி ௨௭-ல் கழித்து மிகுந்தசேடம் — நட்சத்திரம்

ஆறாவது.

௬-ல் பெருக்கி ௩௰-ல் கழித்து மிகுந்தசேடம் — திதி

எழாவது.

கூ-ல் பெருக்கி எ-ல் கழித்து மிகுந்தசேடம் பாரம்

எட்டாவது.

எ-ல் பெருக்கி கஉ-ல் கழித்து மிகுந்தசேடம் ராசி

ஒன்பதாவது.

ச-ல் பெருக்கி ச-ல் கழித்து மிகுந்தசேடம் வம்சம்

பத்தாவது.

ச-ல் பெருக்கி கூ-ல் கழித்து மிகுந்தசேடம் அம்சம்

பதினோராவது.

உய-ல் பெருக்கி ௱-ல் கழித்து மிகுந்தசேடம் வயிறு

ஆக-பொருத்தம்-கக-க்கு

ஆயமீராமற்போனால் அ-வைத்துக்கொள்ளவும்
ஆகாயமீராமற்போனால் கஉ-வைத்துக்கொள்ளவும்
விரையமீராமற்போனால் ய-வைத்துக்கொள்ளவும்
யோனிமீராமற்போனால் அ-வைத்துக்கொள்ளவும்
நாள்மீராமற்போனால் உஎ-வைத்துக்கொள்ளவும்
திதிமீராமற்போனால் ௩ய-வைத்துக்கொள்ளவும்
வாரமீராமற்போனால் எ-வைத்துக்கொள்ளவும்
இராசிமீராமற்போனால் கஉ-வைத்துக்கொள்ளவும்
வம்சமீராமற்போனால் ச-வைத்துக்கொள்ளவும்
அம்சமீராமற்போனால் கூ-வைத்துக்கொள்ளவும்
வயதுமீராமற்போனால் ௱-வைத்துக்கொள்ளவும்

ஆகாயம் அதிகப்பட்டு விரையம் குறைவாயிருந்தால் வீட்டுக்குடையவன் தனவானாவான்.

ஆகாயங்குறைவாயிருந்து விரையதிகமாயிருந்தால் தரித்திரனாவான் ஆகாயமும் விரையமும் சரியாயிருக்கில் சமனாயிருக்கும்.

க-வந்தால் துருவசாயம் இந்திரன்
உ-வந்தால் கர்மாயம் அக்கினி
௩-வந்தால் சிம்மாயம் யமன்
ச-வந்தால் சிவனாயம் நிருதி
ரு-வந்தால் ரிஷபாயம் வருணன்
சா-வந்தால் கானாயம் வாயு
எ-வந்தால் கெசாயம் குபேரன்
அ-வந்தால் காகாயம் ஈசானியம்

துவசாயத்துக்கு வடக்கே கட்டலாம்
சிம்மாயத்துக்கும் கெசாயத்துக்கும் மேற்கே கட்டக்கூடாது
ரிஷபாயமேற்கேயல்லாமல் மற்றவிடங்களில் கட்டக்கூடாது
துவசாயம் அக்கினிமூலையில் கட்டக்கூடாது
மற்ற எந்ததிக்கிலும் கட்டக்கூடாது
மற்ற எந்தத்திக்கிலேகட்டியிருக்கிறதோ அந்தப் பிரகாரமேயி

ருக்கலாம் மற்றொருவிடங்களிலுங் கட்டக்கூடாது

துவஜாயம் ரிஷபாயம் சிம்மாயம் பிராமணருக்கும் க்ஷத்திரியாருக்குமாகும்.

கெசாயம் ரிஷபம் வைசியர்களுக்கும் சூத்திரர்களுக்குமாகும் துவசாயம் நல்லபுண்ணியவானவான்.

தூமாயம் மிருத்துபிருதம்
சிம்மாயம் விஷைப்பிரதம்
சிவநாயம் ரோகப்பிரதம்
ரிஷபாயம் இராட்சதபிரதம்
கெசாதத்துக்கு சுகப்பிரதம்
காகாயத்துக்கு ரிஷைபலம்

காறுகாயத்துக்கும் இந்த ஆயங்களில் குணந்தெரிவதற்கு ஆயங்களின்னையம் பண்ணும்போது ஒரு அங்குலமானால் பூரண புள்ளடலை அறியவும் சேஷமாயிருந்தால் சமபலனாயிருக்கும் அங்குலம் குறைவாயிருந்தால் குணங்குன்னறியவும் இந்த ஆயங்களின் குணங்கள் தெரிந்துகொள்வதற்கு விபரம்.

துதிபலன், தூமாயத்துக்கு குணம் க-சிம்மாயத்துக்கு குணம்-க சிவநாயத்துக்கு குணம்-ச ரிஷபாயத்துக்கு குணம்-ள. கெஜாயத்துக்கு குணம்-ரு காகாசத்துக்கு குணம்-அ.

இந்த ஆயங்களும் குணங்களும் யேற்றக்குறைவில்லை.

அமாவாசி அதற்கு மறுநாள்பாத்தை மதுகப்பிரத்தம் சதுர்த்திகமபி சதுர்த்தி இம்மூன்றும் வீட்டைபாழுபண்ணும் அமாவாசி கர்த்தனுக்கு பித்ருத்து உபாயமுண்டாகும்.

முதலாவது-ஆகாயம்-வெண்பா.

அருசிலச்சான்ற ராறிவருந்துயர
மிருசியமூன்றொன்றும் மேவியாம்-தந்சாமல்
நாலெட்டிரண்டு நாசமாமம்மனைக்கு
மேலெட்டுடன்சொல் விதி.

இ-ள் கெற்பகிலையறியும்படி எசமானுடைய சாணால் நாலு சாண நீளக்கோலால் கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு கோணமலைங்கு இரண்டு தொகையுங் கூட்டிமாறிவந்த தொகையை எட்டிற்கழிக்க வந்தது வந்தால் யமகெற்பம் அதற்குச் சகலகாரியமுஞ் செய்து பொருந்தி நடக்கும் ஆறுவந்தால் காக்கைகெற்பம் அதுமத்தியம் நீசனுக்கிருக்கவேண்டியது ஒன்று வந்தால் கருடகெற்பம் நால்வகைச்சாதிக்கும் பொருந்தியிருக்கும் மூன்று வந்தால் சிங்ககெற்பம் அது உத்தமம் ஏழுவந்தால் கொக்குகெற்பம் அதுசுபம் இரண்டு வந்தால்புறாகெற்பம் அதுமத்தியம் வேடனுக்காம் நான்குவந்தால் சிவானகெற்பம் அது மத்தியம் குறவர் லம்பாடிகட்காகும் எட்டு வந்தால் கழுதைகெற்பம் அது மத்தியம் மனைமுடியாது நல்லது ஒருவேளை முடித்தாலும் அந்தமனை பாழடைந்துபோம் அது தொம்பறவர் குட்டைக்காரர்களுக்கும் மயில்மான் இவைகளுக்குப் பொருந்திய மனையாகும்-எ-று.

உ-வது ஆதாயம்.

சீர்பெருமாயத்தைச் சேரவெட்டினிற்
கூர்தாவெட்டினிற் குலவுபன்னிரண்
டோர்தாக்கழுத்திட வொன்றிலக்கமே
ஏருமாதாய மென்றிசைத்தனையே.

இ-ள். மூன் ஆதாயத்தை எட்டிற் பெருக்கி வந்த தொகையை பனிரண்டிற் கழிக்க மிகுந்த ஆதாயம் எ-று. (உ

மேவியவொன்றிரண் டேகபோகமா
மேவிதிரிசதுர கீர்த்திசௌரியந்
தாவுமைந்தாறி னிற்றனியத்தன்
மேவுமேழெட்டினிற் சுகமெய்ஞ்ஞானமே.

இ-ள். ஆதாயம் ஒன்று இரண்டு வந்தால் சுகபோக பாக்கிய முண்டாம் மூன்று நான்கு வந்தால் கீர்த்தி சௌரியமும் உண்டாம் ஐந்து ஆறுவந்தால் தனதானியமுண்டாகும், ஏழு எட்டு வந்தால் சுபமும் மெய்ஞ்ஞானமும் உண்டாகும் எ-று. (௩)

எட்டெனொன்பதினிற் கியன்றபோகமாம்
மட்டறுத்தசந்தனில் வரையுமன்றுமே
எட்டெண்மூன்றுமே னினியதனமாந்
சட்டமாந்துவர்தசம் சமஸ்தமுநன்மையே.

இ-ள். ஒன்பதுவந்தால் மிகுந்தபோகபாக்கியம் பத்துவந்தால் சகல காரியங்களும் வசியமாகும் பதினொன்றுவந்தால் தருமசிந்தை யுண்டாகும் பனிரெண்டுவந்தால் சமஸ்தமும் உத்தமபலனும் நடக் கும் எ-று. (௪)

௩-வது விரையம்.

நம்மையாமாயத்தை நிலத்திற்றாக்கியே
பொன்னியபத்தினிற் பொருந்தநீக்கினி
னின்னிலைசிலைதர் மறியவொன்றினிற்
றுன்னியவனவிரண் டேத்தாங்குன்றுமே.

இ-ள். மூன் ஆதாயத்தை ஒன்பதிற்பெருக்கி பத்தில் கழிக்கப் பத்துக்குள்ளாக வந்தால் செலவுமொன்றுமிருந்தால் செல்வம் குன்றிப் போம் இரண்டிற்குத் திப்படும் எ-று, (௫)

குன்றிடமூன்றினிற் குலவுநற்சுகம்
வென்றிசேர்நாலினில் விளங்கும்புத்திரர்
ஒன்றியைவையத்தினி லோங்கநற்செயம்
என்றனர்தரித்திர மேழுக்கென்னவே.

இ-ள். மூன்றுவந்தால் குடும்பவிர்த்தியுண்டாம் நாலுவருமானா ல் புத்திரர் விர்த்தியுண்டாம் ஐந்தானால் விருதாவாசகேரிடும் ஆறு மிருந்தால் ஆரோக்கியமுண்டாகும் ஏழுவாகில் தரித்திரமுண்டாகும்.

எண்ணவேவெட்டினி லெக்குமிவாசமாம்
பன்னியநவத்திற் பாலரைப்பெறலாம்
முன்னியதசமதி லுத்தமமக்கரு
பின்னுமென்கோவெனக் கெடுத்துரைத்ததே.

இ-ள். எட்டுவந்தால் இலட்சுமி வாசமாயிருப்பாள் ஒன்பது வந்தால் புத்திரசம்பத்தும் பத்துவந்தால் உத்தமம் எ-று. (எ)

இந்த ஆதாயத்திற்கும் விரயத்திற்கும் விபரம் ஆதாயத்திற்கு விரயம் அதிகப்படல் கெடுதி விரயத்திற்கு ஆதாயம் அதிகப் படல் நன்மை ஆதாயமும் விரயமுஞ் சமனாயிருக்கில் சுபபலன்.

௬-வது யோனிப்பொருத்தம்.

உரைத்தபடி யுரைத்தமூன்றினிற்
பொருத்தமைத்தை யட்டமத்திற்போக்க
விருத்தியாயின்றன விளக்கும்யோனியாம்
பொருத்திடும்வேளைப் போன்றதன்னியே.

இ-ள். மூன் ஆதாயத்தை மூன்றுபெருக்கி எட்டின்னாக மின்ற து இஷ்டயோனியென் றறியவும் எ-று. (அ)

சொற்றதிசைகளாமனை சற்சமாத்தியப்
பற்றிரண்டதனில் தின்றுன்பமே
சத்தமூன்றினிற் சயத்தானாகுனினிற்
அத்தகவானம்பினி வாட்டுமென்பரே.

இ-ள். யோனி ஒன்றாயிருந்தால் இந்திரன் கிழக்கு அதாகொடி யோனி எந்நாளும் குறைவில்லாப் பாக்கியமுண்டாகும் இரண்டாயி ருந்தால் தென்கிழக்கு அக்கினி அது தூமயோனி அதற்குக்கலகம் மூன்றாயிருந்தால் தெற்குயமன் அது சிங்கயோனி சயம்பொருந் தும் நான்காயிருந்தால் தென்மேற்கு நிருதி சுவானயோனி எந்நாளு ம் பிணியாயிருக்கும் எ-று.

காட்டியவைந்தினிற் சர்ப்பங்கள் தனம்
பூட்டியவாறினிற் பொலியும்பொக்கிஷம்
கூட்டியவேழ்சகன் குலைதற்சகம்
நீட்டியவாயக பெட்டிலிஷ்டபலம்

இ-ள். ஐந்துக்கு மேற்கு வருணன் சர்ப்பயோனி தனம்பொரு த்திய தனம்பெருகும் ஆறுவதாகில் வடமேற்குமாயும் எலியோனி எல்லாப்பொருளும் அற்ற நிற்பாக்கியமாகும் ஏழுவருகுமாகில் வ டக்கு குபேரன் யானையோனி அக்ககுடும்பம் சுபேட்சமாயிருக்கும் எட்டுமாகில் வடக்கு ஈசானியன் முதல்யோனி அதற்கு ஒன்றுமில் லாமல் நிர்பாக்கியமாயவிடும் எ-று.

### ௯-வது சாதிகள் பொருத்தம்.

பிராமணன் பொது க்ஷத்திரியன் நன்று வைசியன் நன்று சூத்திரன் மத்திமம்.

### ௰-வது அங்கிஷப் பொருத்தம்.

௧-க்கு சூரிய அங்குஷம் தீது
௨-க்கு சோமாங்கிஷம் பாக்கியம்
௩-க்கு சத்தியங்கிஷம் நன்மையுண்டாகும்
௪-க்கு பூஷாரங்கிஷம் தானியங்கள் விர்த்தியுண்டு
௫-க்கு குரு அங்கிஷம் இராச்சியபரிபாலனமுண்டு
௬-க்கு சுக்கிர அங்கிஷம் யோகபலன்
௭-க்கு சனி அங்கிஷம் நோயுண்டாகும் தீது
௮-க்கு இராகு அங்கிஷம் நோயுண்டாகும் தரித்திரம் தீது
௯-க்கு கேது அங்கிஷம் சகலமும் நன்மை.

### ௰௧-வது மனைக்கு வயது.

௯௰-வருஷத்துக்கு மேற்பட்டதொகைநன்மை ௯௰-க்குக்குறையில் அந்தமனைகொள்ளாது இவைகளில் ஆயுசும் சிலவுவரினும் ஆக்கம் சிறந்து அறிவுபெருகினும் தங்கிஷநாள் பக்கம் யோனிவாரம் ராசிகொள்ளாதவைகளினும் ஆயுசுகுறையினும் மனைக்காகாது.

### பூதபலன்.

மேற்சொல்லிய துருவத்தை ௩-ல் பெருக்கி ௫-ல் கொடுக்க மிருந்தால் பூதத்துவம் இதன்பலன் பாக்கியப்பிராப்தம்.

௨-மிருந்தால் உலகதத்துவம் இதன்பலன் சந்தோஷம்
௩-மிருந்தால் அக்கினிதத்துவம் இதன்பலன் சந்தோஷம்
௪-மிருந்தால் வாய்வுதத்துவம் இதன்பலன் மிருத்யுபயம்
௫-மிருந்தால் ஆகாசதத்துவம் இதன்பலன் தரித்திரம்.

### குலநிர்ணயம்.

மேற்படி துருவபதத்துவத்தை ௬-ல் பெருக்கி ௧௨-ல் கொடுக்க ௧-மிருந்தால் மேஷம் ௨-மிருந்தால் ரிஷபம் ௩-மிருந்தால் மிதுனம் ௪-மிருந்தால் கடகம் ௫-மிருந்தால் சிங்கம் ௬-மிருந்தால் கன்னி ௭-மிருந்தால் துலாம் ௮-மிருந்தால் விருச்சிகம் ௯-மிருந்தால் தனுசு ௰-மிருந்தால் மகரம் ௰௧-மிருந்தால் கும்பம் ௰௨-மிருந்தால் மீனம் இதில் எந்தத்தொகைவருமோ அந்தத்தொகையை நாலுபாதமுள்ள நட்சத்திரத்துக்குப் பிரசியாகும்.

சிற்பசாஸ்திரமென்னும்
மனையடி சாஸ்திரம்.
முற்றிற்று.



உ

கடவுள் துணை.

# மனையடிசாஸ்திரத்தின் அட்டவணை.

மனையடிசாஸ்திரத்தின் அட்டவணை.

முற்றிற்று.